# கல்கி

KALKI
26.2.89
ரூ. 2.

# கோஷ்டிப் பூசலில் சிக்கித் தவிக்கிறார்...

# மனம் கவரும் புத்துணர்ச்சி

எழில் வடிவத்துடன் கூடிய புதிய சந்தன நறுமண பவுடர்

தரத்தில் உயர்ந்த தூய்மையான சந்தன தைலம்
கலந்த பவுடர் இப்பொழுது இனிய நறுமணத்துடன்
புத்துணர்ச்சி அளிப்பதை நீங்களே உணர்வீர்கள்.
புதிய மைசூர் சந்தன டால்கம் பவுடர் நாள்தோறும் உங்கள்
மேனி எழிலுக்கு மெருகேற்றி உங்களை புதுப்பொலிவுடன்
இருக்கச் செய்கிறது.
மைசூர் சந்தன டால்கம் பவுடர் புது மலர்ச்சியுடன் இருக்க
இப்பொழுது புதிய வடிவில் வருகிறது.

புதிய

## மைசூர் சாண்டல் டால்க்

**இனிய நறுமணம்—புதிய சுகம்**




தயாரிப்பாளர்கள் : மைசூர் காஸ்மெடிக்ஸ் லிமிடெட். விற்பனை ஏற்பாடு : மைசூர் சேல்ஸ் இண்டர்நேஷனல் லிமிடெட்.

# "இந்த பெண்மணிகளைக் கடவுள் கூட மன்னிக்க மாட்டார்!"



## —பி.ஹெச்.பாண்டியன்

"இரட்டை இலை வழக்கில் ஜானகி அணியின் சார்பாக ராகவானந்தமும், ஜெயலலிதா அணியின் சார்பாக ஹண்டேயும் மனு தாக்கல் செய்திருந்தனர். ஏதோ ஒரு சில பேரைக் கூட்டி வைத்துக் கொண்டு 'ஒன்றாகி விட்டோம்' என்று கூத்தடித்திருக்கின்றனர். அரசாங்க விடுமுறையான ஓர் இரண்டாவது சனிக்கிழமையன்று இந்த இரண்டு பேரும் தேர்தல் கமிஷன் முன்பு போட்டிருந்த மனுக்களை வாபஸ் வாங்கி விட்டு, 'இரட்டை இலையோடு' திரும்பி வந்திருக்கின்றனர். மிகவும் ஆச்சர்யமான விஷயம் என்னவென்றால், விடுமுறை தினத்தில் இந்த இரண்டு பேரும் டெல்லிக்கு வந்து தங்கள் ஆபீஸ் கதவைத் தட்டுவார்கள் என்று தேர்தல் கமிஷன் எதிர்பார்த்து நின்றதுதான். மேலும் இப்போது இணைந்திருக்கும் இவர்களைத் தவிர வேறு பல குழுக்களும், அ. தி. மு. க.வில் உண்டு என்று தேர்தல் கமிஷனுக்குத் தெரிந்திருந்தும், சம்பந்தப்பட்டவர்களுக்கு, 'வழக்கு விசாரணைக்கு வருகிறது' என்று முன்னறிவிப்புக் கொடுக்காமல் ஒருதலைப் பட்சமாக, அவசரக் கோலத்தில் தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது. ஏன் இந்த அவசரம்? இங்கேதான் சந்தேகம் எழுகிறது.

"பொதுத் தேர்தலின் போது நான் தேர்தல் கமிஷனுக்கு "எனக்கு இரட்டை இலைச் சின்னம் வழங்க வேண்டும்" என்று கடிதம் எழுதினேன். அதற்கு தேர்தல் கமிஷன் 'தேர்தல் ஆயத்தங்கள் நடந்து கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் உங்கள் வேண்டுகோளைப் பரிசீலிக்க முடியாது' என்று பதில் எழுதியது. எனக்கு அப்படி பதில் எழுதிய தேர்தல் கமிஷன் இடைத் தேர்தல்கள் நடக்க இருக்கும் இந்தச் சமயத்தில் அவசர அவசரமாகச் சின்னத்தை வழங்கியது ஏன்?

"ஜெயலலிதா அணியில் என்னை இணைத்துக் கொள்ளாவிடில் என் எம்.எல்.ஏ. பதவி பறி போகும் என்று சொல்கிறார்கள். நான் ஜானகி அணியின் சார்பாக இரட்டைப் புறா சின்னத்தில் தேர்ந்தெடுக்கப்பட்டவன். நான் எந்தக் கட்சிக்கும் தாவவில்லை. சட்ட சபையைப் பொறுத்தமட்டில் நான்தான் பார்ட்டி. வெளியில் நடக்கும் நிகழ்ச்சிகள் என்னைப் பாதிக்காது. இந்த விஷயத்தில் சட்டம் மிகத் தெளிவாகவே இருக்கிறது. யாரும் என்னை ஒன்றும் செய்ய முடியாது.

"எம்.ஜி.ஆரின் சொத்துக்களைக் கைப்பற்றவே இந்த இரு பெண்மணிகளும் இணைந்திருக்கிறார்கள். ராகவானந்தம், மாதவன் போன்றோரின் தவறான ஆலோசனையில் ஜானகி செயல்பட்டு இருக்கிறார். எம்.ஜி.ஆர். உயிலைப் பொறுத்தமட்டில் கட்சி உடைந்தால் சத்யா ஸ்டூடியோ வருமானம் ஊமை — செவிடர் பள்ளிக்குச் செல்ல வேண்டும். ஏற்கெனவே கட்சி பல பாகங்களாக உடைந்து விட்டது. உயிலில் 'கட்சி மீண்டும் ஒன்று சேர்வது' பற்றி ஒன்றும் குறிப்பிடவில்லை. எனவே எம்.ஜி.ஆர். உயிலை நிறைவேற்றும் பொறுப்பை அரசே ஏற்று, உயில்படி எல்லாம் நடக்க ஏற்பாடு செய்ய வேண்டும். ஊமை — செவிடர் பள்ளிக்குச் செல்ல இருக்கும் வருமானத்தைத் திசை திருப்ப நினைக்கும் இந்தப் பெண்மணிகளைக் கடவுள் கூட மன்னிக்க மாட்டார்!"

சந்திப்பு: **கௌசல்யா**

# சொத்துக்காகச் சேரவில்லை!

## — முத்துசாமி சொல்கிறார்



**எம்.ஜி.ஆர்.** சக்திகளில் இரு முக்கிய பிரிவினரை மீண்டும் ஒன்றாக்கி விட்ட சந்தோஷத்தில் முத்துசாமி இருந்தார். கேட்டோம்:

''இணைப்பு திடீரென்று ஏற்பட்டதா?''

''பல மாதங்களாகத் தொடர்ந்து வரும் முயற்சி இது. இடையில் தேர்தல் வந்தது. அது முடிந்தவுடன் பேச்சு வார்த்தைகள் மீண்டும் தொடர்ந்தன.''

''எம்.ஜி.ஆரின் சொத்தை அபகரிக்க வேண்டும் என்ற எண்ணத்தில்தான் மீண்டும் இணைப்பு ஏற்பட்டுள்ளதா?''

''தொண்டர்களின் கருத்துக்கு மதிப்பளித்து இணைப்பு ஏற்பட்டுள்ளதே தவிர, பணத்தை அடிப்படையாக வைத்து அல்ல; கட்சிக்கு உண்டான செல்வம் கட்சிக்கு வந்துதானே சேரும்.

இணைப்பதற்கு ஜெயலலிதா பேரம் பேசியதாக....''

(இடைமறித்து) ''பச்சைப் பொய். நாங்கள் இணைந்தது இரட்டை இலையை மீண்டும் பெறுவதற்காக என்று வேண்டுமானால் வைத்துக் கொள்ளுங்கள். பணம் ஒரு விஷயமே இல்லை. பணத்தையும் தொண்டர்களின் உணர்வையும் ஒன்றுபடுத்தாதீர்கள்.''

''தனித்தனி அணியாக இருந்த போது இரு அணியினரும் அவற்றின் தலைவர்களும் ஒருவரையொருவர் தாக்கு தாக்கென்று தாக்கியதற்குப் பின்பு மீண்டும் இணைய நேர்ந்ததற்குக் காரணம் தோல்வியால் ஏற்பட்ட பயம்தானா?''

''நீங்கள் அதற்கு என்னதான் காரணம் கற்பித்தாலும் எங்களைப் பொறுத்தமட்டில் பதில் ஒன்றுதான். தொண்டர்களின் உணர்வறிந்தே இணைப்பு நடந்திருக்கின்றது.''

''அப்படியானால் இன்னும் இணையாமல் இருப்பவர்கள் தொண்டர்கள் கருத்துக்கு எதிராக நடப்பவர்களா?''

''நீங்கள் அவர்களைத்தான் கேட்க வேண்டும்.''

''இணைந்த உங்களுக்குத் தகுந்த மரியாதை அளிக்கப்படுமா?''

''நீங்கள் ஏன் இவ்வாறு சந்தேகப்படுகிறீர்கள்? நடக்க இருக்கும் இடைத் தேர்தல்களில் எங்கள் வேட்பாளர்களைப் பாருங்கள்; ஒன்றுபட்ட தோழர்களுக்குள் எந்த மனக் கசப்பும் ஏற்படாவண்ணம் வேட்பாளர்களைப் போட்டிருக்கிறோம்.''

''இந்த இணைப்பு ஏற்பாடுகளில் ஜானகி அம்மாளின் பங்கு....?''

''அதுதான் எங்கள் பொதுச் செயலாளரே (ஜெயலலிதா) சொல்லி விட்டாரே! தலைவர் பதவி ஜானகி அம்மாவுக்காகக் காலியாக வைக்கப்படும்!''

சந்திப்பு: **இல்லப்பா**

படம்: **சுபா**



**முதல்வர்:** நிவாரண நிதி வசூல் செய்ய நீங்களாமே, எதுக்கு...?

**அமைச்சர்:** திடீர்னு ஊழல்னு சொல்லி என்னை அமைச்சர் பதவியிலிருந்து நீக்கிட்டீங்கன்னா என்ன செய்யறது? அதுக்காகத்தான்!

— கடுவை கோபால்சாமி.

'திப்பு சுல்தான்' என்ற தலைப்பில் டீ.வி. தொடர் தயாரித்து வந்த டைரக்டர், நடிகரான சஞ்சய்கான், அண்மையில் ஒரு தீ விபத்தில் சிக்கியது தெரியும். 'டீ.வி. அண்ட் வீடியோ வேர்ல்ட்' பத்திரிகைக்கு அவர் அளித்த பேட்டி, அவர் எவ்வளவு மனோதிடம் உள்ளவர் என்பதை உணர்த்துகிறது. பேட்டியிலிருந்து சில பகுதிகள்......



# தீ விபத்தில் சிக்கிய தீரர் சஞ்சய்கான்

"டீ.வி. தொடருக்காக நீங்கள் குறிப்பாகத் திப்பு சுல்தான் வாழ்க்கை வரலாற்றைத் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம்?"

"பள்ளிக்கூட நாட்களில் படித்த சரித்திரப் புத்தகங்களிலெல்லாம் திப்பு சுல்தான் ஒரு கொடூரமான சர்வாதிகாரி என்றுதான் வர்ணிக்கப்பட்டிருந்தது. ஆனால் நான் ஸ்ரீரங்கப்பட்டணத்திற்குச் சென்றிருந்த போது அங்கிருந்த கைடு திப்பு சுல்தானைப் பற்றிச் சொன்ன விஷயங்கள் வேறு மாதிரியாக இருந்தன. அதோடு, 'திப்பு சுல்தானின் வாள்' என்ற பகவான் கித்வானியின் புத்தகமும் என்னைத் திப்பு சுல்தான் மேல் அதிக ஈடுபாடு கொள்ளச் செய்தது. அதனால்தான் அப்புத்தகத்தின் உரிமைகளை வாங்கித் தொடர் எடுக்க ஆரம்பித்தேன்."

"சினிமாவாக எடுக்காமல் டீ.வி. தொடராக எடுக்கக் காரணம்?"

"நான் திப்பு சுல்தானைப் பற்றிப் படமெடுக்க எண்ணிய போது, அதற்குக் கோடிக்கணக்காகச் செலவு செய்ய வேண்டியதையும் மறக்கவில்லை. அதே சமயத்தில் வீடியோக்களின் வரவால் சினிமாக்களின் வசூலும் பாதிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இந் நிலையில் சினிமாவாக எடுத்தால் என்னவாகும் என்று எண்ணிப் பார்த்தேன். மேலும் இரண்டரை மணி நேரச் சினிமாவை விட, டீ.வி. தொடரில் திப்பு சுல்தானைப் பற்றி நிறையச் சொல்ல முடியுமல்லவா!"

"உங்களின் இந்தத் தொடர் எந்த விதத்தில் மற்ற தொடர்களை விட வித்தியாசமாக இருக்கும்?"

"பிரம்மாண்டமாகவும் உயர்தரமாகவும் தயாரிக்கப்படும் சினிமாக்களைப் போல எனது தொடரை டீ.வி.யில் கொண்டு வரப் போகிறேன். இப்போது டீ.வி.யில் ஏன் தான் மிகச் சாதாரணத் தொடர்கள் காட்டப்படுகின்றன என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை."

"நீங்கள் செய்யப் போகும் ஏராளமான செலவுகளை எப்படி இந்தத் தொடரின் மூலம் திரும்பப் பெறப் போகிறீர்கள்?"

"இத் தொடர் டீ.வி.யில் காட்டப்படுவதோடு, பிறகு வீடியோ கேசட்டுகளாக விற்பதிலும் எனக்கு வருமானம் வரும். அதோடு டீ.வி.யில் இத் தொடர் காட்டப்படும் நேரத்தை இன்னும் அதிகப்படுத்தித் தந்தால் விளம்பரதாரர்களிடமிருந்து எனக்கு அதிகப் பணம் கிடைக்க வாய்ப்பிருக்கிறது. இல்லையென்றால் டீ.வி. தொடர் மூலம் மிகக் குறைந்த வருமானம்தான் கிடைக்கும்."

"இத் தொடருக்கு, என்ன பட்ஜெட் போட்டிருக்கிறீர்கள்?"

"இறுதியாக இத் தொடரை எடுத்து முடிக்க என்ன செலவாகும் என்று தெரியவில்லை. ஆனால், உடைகளுக்காக மட்டும் இதுவரை இருபது லட்ச ரூபாய் செலவாகியிருக்கிறது! எதற்காக இத்தனை பணத்தை இதற்குச் செலவு செய்கிறாய் என்றும் சிலர் கேட்கிறார்கள். என்ன செய்வது? சாதாரணத் தொடராக இருந்தால் வெறும் பாண்ட்—சட்டைகளையே நடிக்கும் பாத்திரங்களுக்குப் போட்டு விடலாம். ஆனால் இது அப்படியில்லையே!"

"திப்பு சுல்தானை எந்தக் கோணத்தில் உங்கள் தொடரில் காட்டுகிறீர்கள்?"

"திப்பு சுல்தான் சொன்ன சொல் தவறாதவன்; நியாயமானவன்; படித்தவன். இதையெல்லாம்தான் நான் காட்டப் போகிறேன். இதைக் காண்பதன் மூலம் திப்பு சுல்தானைப் போல ஒரு தலைவன் நம் நாட்டில் உருவானால் என் முயற்சி வெற்றி பெறும்."

"இந்தத் தொடரின் தயாரிப்பு மற்றும் டைரக்ஷன் பொறுப்புக்களை ஏற்றுக் கொண்டுள்ள நீங்கள் திப்பு சுல்தானாகவும் நடிக்கிறீர்களே, ஏன்?"

"திப்பு சுல்தானின் குணங்களான வெளிப்படையான — வெகுளியான சுபாவம், அவனுக்கு நண்பர்களிடமிருந்த நம்பிக்கை, தயாள குணம்... இவையெல்லாம் என்னிடமும் சிறிதளவு இருப்பதாக நினைக்கிறேன். இதுதான் திப்பு சுல்தானாக நான் நடிப்பதற்குக் காரணம்."

# கோஷ்டிப் பூசலில் சிக்கித் தவிக்கிறார்...

ஜனவரி 20. ம. பி. முதல்வர் அர்ஜுன் சிங்கின் மகன் அஜய்சிங் செயலாளராக இருக்கும் 'சூரத் குழந்தைகள் நலச் சங்கம்' நடத்தி வரும் லாட்டரியில் ஏகப்பட்ட சட்ட மீறல்கள் நடந்திருப்பதோடு, கோடிக்கணக்கான ரூபாய்களும் மோசடி செய்யப்பட்டிருக்கின்றன என்பதை ம. பி. உயர்நீதி மன்றம் சுட்டிக் காட்டுகிறது. போபாலுக்கு அருகில் அர்ஜுன் சிங் கட்டியிருக்கும் பங்களாவுக்கான நிலம் எப்படி வாங்கப்பட்டது? அதைக் கட்ட எவ்வளவு பணம் செலவானது? அந்தப் பணம் எங்கிருந்து பெறப்பட்டது என்பதையெல்லாம் அவர் தேசத்திற்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருப்பதாகவும் உயர்நீதி மன்றம் தீர்ப்பளிக்கிறது.

உடனே, அர்ஜுன் சிங், காங்கிரஸ் கட்சி மேலிடத்தில் அந்த உயர்நீதி மன்றத் தீர்ப்பு, தமது எதிரிகளான மோதிலால் வோரா, மாதவராவ் சிந்தியா ஆகியோரின் தலையீட்டால் வழங்கப்பட்டதுதான் என்று எடுத்துச் சொல்லிப் பார்க்கிறார். அவர் பேச்சைக் கேட்க மேலிடம் தயாராக இல்லை. அர்ஜுன் சிங்கை ராஜினாமாச் செய்யும்படி சொல்லி விடுகிறது மேலிடம்.

ஜனவரி 23—ம் தேதியன்று டெல்லி மேலிடப் பார்வையாளர்களாக குலாம் நபி ஆஸாத், தர்பாரா சிங், பிர்பகதூர் சிங் ஆகியோர் அர்ஜுன் சிங்கையும் அழைத்துக் கொண்டு புதிய முதல்வரை நியமிப்பதற்காகப் போபாலுக்கு வந்து சேருகிறார்கள்.

அர்ஜுன் சிங்கின் ஆதரவாளர்களோ, டெல்லி மேலிடம் நியமிக்கும் முதல்வர்களைத் தங்களால் ஏற்றுக் கொள்ள முடியாதென்றும் தாங்களே தங்கள் முதல்வரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள அனுமதிக்க வேண்டுமென்றும் கோருகிறார்கள். இந்தச் சமயத்திலேயே டெல்லி மேலிடம் ம. பி.யின் புதிய முதல்வராக மாதவராவ் சிந்தியாவை நியமிக்க எண்ணியிருப்பதாகச் செய்தி பரவவே, அவர் வரக் கூடாதென்று அர்ஜுன் சிங்கின் ஆதரவாளர்கள் பலமாக எதிர்க்கிறார்கள்.

இரவு பகலாக மேலிடப் பார்வையாளர்கள் இவர்களைச் சமாதானப்படுத்த முயன்றும் முடியவில்லை. சிந்தியா முதல்வரானால் தாங்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக ராஜினாமாச் செய்வதாகச் சொல்கிறார்கள் அவர்கள். இந் நிலையில் யாருக்குத்தான் எம்.எல்.ஏ.க்களின் ஆதரவு இருக்கிறது? மேலிடப் பார்வையாளர்கள், ஒவ்வொரு எம்.எல்.ஏ.வையும் தனித் தனியாகச் சந்தித்துக் கருத்துக் கேட்ட போது, 185 பேரில் 140 பேர் திக்விஜய் சிங் என்பவரே முதல்வராக வேண்டும் என்று ஆதரிப்பதாகத் தெரிய வருகிறது.

திக்விஜய் சிங்கோ அர்ஜுன் சிங்கின் உறவினர். அர்ஜுன் சிங் ஒரு ஊழல் பேர்வழி என்று சொல்லி அவரது உறவினரை எப்படி முதல்வராக்க முடியும்? இந் நிலையைச் சமாளிக்க டெல்லியிலிருந்து மேலும் கூடுதல் பார்வையாளர்களாகப் பூட்டா சிங்கும், பொட்டேடாரும் வருகிறார்கள். அர்ஜுன் சிங் ஆதரவு கோஷ்டி எம்.எல்.ஏக்களிடம், தாங்கள் நியமிக்கும் முதல்வரை ஏற்றுக் கொள்ளவில்லையென்றால் அர்ஜுன் சிங்கையும் அவரது நெருங்கிய ஆதரவாளர்களையும் கட்சியிலிருந்தே விலக்கி விடுவதாகப் பயமுறுத்தி, ஒரு வழியாக அர்ஜுன் சிங் கோஷ்டியை ஒப்புக் கொள்ள வைக்கிறார்கள்.

இருப்பினும் அவர்கள் மாதவராவ் சிந்தியாவை முதல்வராக ஒப்புக் கொள்ளவில்லை. மோதிலால் வோராவையே ஒப்புக் கொள்கிறார்கள். வேறு வழியின்றிக் கட்சி மேலிடம், கடந்த பிப்ரவரி 88—இல் எந்த மோதிலால் வோராவை ம. பிரதேச முதல்வராக இருக்கத் தகுதியற்றவர்; செயல் திறனற்றவர் என்றெல்லாம் வர்ணித்துப் பதவி விலகச் செய்து அர்ஜுன் சிங்கை முதல்வராக நியமித்ததோ, அதே மோதிலால் வோராவை இப்போது மீண்டும் ம.பி. முதல்வராக நியமித்திருக்கிறது. இவரை அர்ஜுன்சிங் கோஷ்டி எத்தனை நாட்களுக்குத் தாங்கிக் கொள்ளும் என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

ம.பிரதேச எம்.எல்.ஏக்கள் ஊழல் முதல்வரோடு கோஷ்டி சேர்ந்திருக்கிறார்கள் என்றால், பீகார் எம்.எல்.ஏக்களோ நேர்மையான முதல்வருக்கு எதிராகக் கோஷ்டி சேர்ந்திருக்கிறார்கள்! எல்லா

**மத்தியப்பிரதேசம், பீகார், உத்தரப்பிரதேசம், குஜராத், மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் இ. காங்கிரஸுக்குள் நடைபெற்றுக் கொண்டிருக்கும் குடுமிப்பிடிச் சண்டைகளை விளக்குகிறது இக்கட்டுரை...**

மட்டங்களிலும் பீகார் முதல்வருக்கு எதிர்ப்பு!

முன்பு, பீகார் முதல்வராக இருந்த பிந்தேஸ்வரி துபே ஆட்சியில் ஊழல் பெருகி விட்டது; சட்டம்—ஒழுங்கு கெட்டு விட்டது என்று சொல்லித்தான் அவருக்குப் பதிலாகக் கடந்த ஆண்டு பிப்ரவரியில் தற்போதைய முதல்வர் பகவத் ஜா ஆஸாத்தை பீகார் முதல்வராக நியமித்தது டெல்லி மேலிடம்.

அவர் முதல்வரானதும் முதலில் சட்டம்—ஒழுங்குப் பிரச்னையைச் சீர்படுத்த நினைத்தார். அதற்கு ஒரு நேர்மையான டி.ஜி.பி. வேண்டும்; பீகாரில் அப்படியாரும் இல்லையென்று அவர் கருதியதால், மத்தியப் பிரதேசத்திலிருந்த ஜே. எம். குரேஷி என்பவரைக் கொண்டு வந்து டி.ஜி.பி.யாக நியமித்தார். இது பீகாரிலுள்ள ஆறு மூத்த போலீஸ் அதிகாரிகளைப் பின்னுக்குத் தள்ளி விட்டுச் செய்யப்பட்ட நியமனம் என்பதால், பீகார் போலீஸ் துறை ஆஸாத்துக்கு எதிராகி விட்டது.

அடுத்தது தலைமைச் செயலர் நியமனம். இதில் இருபத்திரண்டு மூத்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகளைப் பின்னுக்குத் தள்ளி விட்டு அருண் பதக் என்பவரைத் தலைமைச் செயலராக்கினார் ஆஸாத். எனவே, அதிகாரிகள் மட்டத்திலும் எதிர்ப்பு!

ஒருமுறை ஆஸாத் எம்.எல்.ஏக்களைப் பற்றிக் குறிப்பிடும் போது, 'அவர்களெல்


• சரத்பவார்


• அர்ஜுன் சிங்


• பகவத் ஜா ஆஸாத்


• மோதிலால் வோரா



லாம் திருடர்கள்; கொள்ளைக்காரர்கள்' என்று வெளிப்படையாகவே பேசினார். அதோடு, எம்.எல்.ஏக்கள் தலைவர்களாக இருந்து, கொழுத்து வந்த கூட்டுறவுத் துறைகளைக் கலைத்து அவற்றை அரசாங்கத்தின் நேரடிக் கண்காணிப்பிற்குக் கொண்டு வந்தார். போதும் போதாதற்கு நிலக்கரிச் சுரங்கக் காண்ட்ராக்டர்கள் செய்து வந்த ஊழல்களுக்கு எதிராகவும் தீவிர நடவடிக்கை எடுத்ததோடு, தம்மைப் பாராட்டி மாலை போட எந்த எம்.எல்.ஏ.யாவது வந்தால், 'எனக்கு ஐஸ் வைப்பதற்காகவா மாலை போட வந்தாய்? அதெல்லாம் நடக்காது..!' என்று விரட்டியடிக்க ஆரம்பித்தார். ஆக, அரசியல்வாதிகளின் சட்ட விரோத வருமானங்களின் ஊற்றுக் கண்களை ஆஸாத் இறுக்கமாக மூடவே, எம்.எல்.ஏக்களும் எதிரானவர்களாகி விட்டார்கள்!

இவர்களோடு, பீகார் கவர்னர் கோவிந்த நாராயண சிங்! இவருக்கும் ஆஸாத்தைப் பிடிக்காது. அதனால் பீகாரில் உள்ள ஏழு பல்கலைக் கழகங்களுக்குத் துணை வேந்தர்களை நியமிக்கும் போது, முதல்வரின் பரிந்துரைகளின்படிதான் நியமிக்க வேண்டும் என்கிற மரபுகளைத் தூக்கியெறிந்து விட்டுத் தம்மிச்சையாகவே துணை வேந்தர்களை நியமித்து உத்தரவு போட்டார். கவர்னரின் உத்தரவுப்படி புதிய துணை வேந்தர்களிடம் பொறுப்புக்களை ஒப்படைக்க வேண்டாம் என ஏற்கெனவே துணைவேந்தர்களின் பொறுப்புகளிலிருந்தவர்களுக்கு உத்தரவு போட்டார் ஆஸாத்! இதைக் கண்ட கவர்னர், 'முதல்வர் ஆஸாத் ஒரு மனநோயாளி' என்று டெல்லி மேலிடத்திற்குக் கடிதம் எழுத, இப்படி ஒரு பக்கம் லடாய்.

கவர்னர் இப்படி என்றால் பீகார் சட்டசபைச் சபாநாயகராக இருந்த சிவசந்திர ஜா இன்னும் ஒரு படி மேலாகச் சென்றார். (கடந்த 52—ம் ஆண்டுத் தேர்தலில் பீகாரில் ஆஸாத், சிவசந்திர ஜா இருவருமே போட்டியிட எம்.பி. சீட் கேட்டதில் ஆஸாத்துக்குச் சீட் தரப்பட்டு ஜாவுக்கு மறுக்கப் பட்டதால் ஆஸாத் மீது அப்போதே கோபம் ஜாவுக்கு!) தற்போதைய முதல்வர் ஆஸாத் எம்.எல்.ஏ. இல்லை; எம்.எல்.சி.தான். எனவே ஒரு எம்.எல்.சி. மேலவைத் தலைவராகத்தான் இருக்க முடியுமே தவிர, சட்டசபைத் தலைவராக இருக்க முடியாது என்று தீர்ப்பளித்தார் சபாநாயகர் சிவசந்திர ஜா. இவருக்கு பீகாரின் முன்னாள் முதல்வர் ஜெகன்னாத்மிஸ்ராவும் ஆதரவு!

இந்தக் குடுமிப்பிடிகளுக்கு இடையில் தான், கடந்த ஜனவரி 25—ம் தேதியன்று பீகார் சட்டசபைக் கூட்டத் தொடர் துவங்குகிறதென்றும் அதில் கவர்னர் உரை நிகழ்த்துகிறார் என்றும் அறிவிக்கப்பட்டது.

இந்த அறிவிப்பு வெளியானவுடனேயே மெஜாரிட்டி எம்.எல்.ஏக்கள் ஒன்று சேர்ந்து, சட்டசபையில் கவர்னர் உரை நிகழ்த்துவதற்கு முன்பு முதல்வர் ஆஸாத் பதவி நீக்கம் செய்யப்படா விட்டால் தாங்கள் யாரும் சட்டசபைக்குச் செல்லப் போவதில்லை என்று அறிக்கை விட்டுப் போர்க் கொடியுயர்த்தவே, நிலைமை மோசமானது.

இவர்களைச் சமாதானம் செய்ய, டெல்லி மேலிடம் ஆஸ்கார் பெர்ணாண்டஸ், பிந்தேஸ்வரி துபே, ஷீலா தௌஸ் ஆகியோரை பீகாருக்கு அனுப்பியது. அதிருப்தி எம்.எல்.ஏக்கள் இவர்களை முற்றுகையிட்டு ஆஸ்கார் பெர்ணாண்டஸை அடிக்கவும் ஆரம்பித்து விட்டார்கள்! அந்த அசிங்கத்தை ஒரு வழியாக உடனிருந்த பிந்தேஸ்வரி துபே தடுத்துப் பெர்ணாண்டஸைக் காப்பாற்றினார். நிலைமை மேலும் மோசமாகாமல் தடுக்க, அந்த எம்.எல்.ஏக்களிடம், 'ஜனவரி முப்பதுக்குள் ஆஸாத் மாற்றப்பட்டு விடுவார். எனவே, நீங்கள் சட்டசபையைப் புறக்கணிக்க வேண்டாம்' எனத் தன்னிச்சையாகவே அறிவித்து விட்டார். அதில் அதிருப்தியாளர்கள் சமாதானமடைந்து சட்டசபைக்குச் செல்ல ஒப்புக் கொண்டனர்.

ஆனால், பிந்தேஸ்வரி துபேயின் இந்தத் தன்னிச்சையான அறிவிப்பைக் கண்டு ராஜீவ் வெளிப்படையாகவே, துபேயிடம் சீறி விழ, துபே உடனடியாகத் தாம் அப்படிச் சொல்லவேயில்லையென மறுப்பறிக்கை வெளியிட வேண்டியதாயிற்று.

நிலைமை மேலும் மோசமானதால், ஆஸாத்தை எப்படியும் காப்பாற்றியே தீர வேண்டுமென்பதற்காக டெல்லி மேலிடம் கவர்னர் கோவிந்த நாராயண சிங்கையும், சபாநாயகர் சிவசந்திர ஜாவையும் ராஜினாமாச் செய்யச் சொன்னது. கவர்னர் உடனடியாகச் செய்து விட்டார். ஜா செய்ய மறுத்தார். எனவே, கடந்த 87—ல் ஏதோவொரு காரணத்திற்காக ஜாவிடம் தேதியிடப்படாமல் வாங்கி வைத்திருந்த ராஜினாமாக் கடிதத்தைத் தேடியெடுத்துத் தேதியிட்டு, அதை ஜாவுக்குத் தெரியாமலேயே துணை சபாநாயகருக்கு அனுப்பி வைத்தது டெல்லி மேலிடம். துணை சபாநாயகரும் அதை ஜாவுக்குத் தெரிவிக்காமலேயே ஏற்றுக் கொண்டதாக அறிவித்து விட்டார்!

ஆக, முதல்வர் பகவத் ஜா ஆஸாத்துக்கு எதிராக இருந்த கவர்னரையும், சபாநாயகரையும் டெல்லி மேலிடம் பதவி விலகச் செய்ததோடு, ஆஸாத்தின் மீது அதிருப்தியாளர்களுக்கு என்ன குறை என விசாரித்துத் தீர்மானிக்க மேலிட ஆய்வுக் குழு ஒன்றையும் நியமித்தது. இவ்வாறு அதிருப்தியாளர்களைத் திருப்திப்படுத்தியது போல் தோன்றினாலும் ஆஸாத்துக்கு இன்னும் தலைவலி தீர்ந்தபாடில்லை. பதவியிழந்த சபாநாயகர் சிவசந்திர ஜா முன்பை விட அதிகமான அளவுக்கு இப்போது குழி பறிக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கிறார் என்பதால் பீகாரில் எந்த நேரத்திலும் எதுவும் நிகழலாம் என்கிற கதைதான்!

மூன்றாவதாக உத்தரப் பிரதேசம். அங்கு முதல்வராக இருந்த பிர்பகதூர் சிங்கால், அண்டை மாநிலமான ஹரியானா

February 1989

| | | | | | |
|---|---|---|---|---|---|
| SUN | | 5 | 12 | 19 | 26 |
| MON | | [illegible] | 13 | [illegible] | 27 |
| TUE | | 7 | [illegible] | 21 | 28 |
| WED | 1 | 8 | [illegible] | 22 | |
| THU | 2 | [illegible] | 16 | 23 | |
| FRI | 3 | 10 | 17 | 24 | |
| SAT | 4 | 11 | 18 | 25 | |

முந்துங்கள்!
பிப்ரவரியில் வாங்குங்கள்!
மார்ச் மாதம் ஃபேன்கள்
விலை உயரும்.





சலுகை சீலிங், போர்டபிள், பிரஷ்ஏர்
விசிறிகளுக்கு

# கேதான்

பெயர் ஒன்றே போதுமானது

# N.S.K.

குரூப் கம்பெனிகள் வழங்கும் சிறப்பு சலுகைகள்




**16.2.89**

அனைவரையும்
அன்புடன் அழைக்கிறோம்

## சிறப்பு பம்பர் பரிசு

பிப்ரவரி மாத இறுதிக்குள் சீட்டில் சேர்பவர்களுக்கும், டெபாஸிட் செய்பவர்களுக்கும், நிலம் வாங்குவோருக்கும் சிறப்பு கூப்பன்கள் வழங்கப்படும்.

குலுக்கல் நாள்; 1.3.89

பம்பர் பரிசு: **1800 சதுர அடி உள்ள வீட்டுமனை**

ஆறுதல் பரிசுகள்: முன், பின் எண்களுக்கு **சைக்கிள்**





## N.S.K. பில்டர்ஸ்

| 1 வருடம் | 2 வருடங்கள் |
|---|---|
| **16%** | **17%** |
| **3 வருடங்கள்** | **5 வருடங்கள்** |
| **18%** | **20%** |

போனஸ்: பிப்ரவரி மாத டெபாஸிட்டுகளுக்கு
**2% போனஸ்**



## N.S.K. சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட்

### போனஸ்

1. சீட்டில் சேர்த்து விடும் அங்கத்தினருக்கு 1% போனஸ்
2. பிரதிமாதம் தவறாமல் பணம் செலுத்துவோருக்கு கட்டிய தொகையில் 1% போனஸ்

| குரூப்புகள் | சேரும் அங்கத்தினர்களுக்கு |
|---|---|
| 200 × 25 = 5000<br>100 × 50 = 5000<br>100 × 100 = 10000 | எவர்சில்வர் பிளேட் |
| 400 × 25 = 10000<br>200 × 50 = 10000<br>250 × 100 = 25000 | எவர்சில்வர் கிண்ணம் (மூடியுடன்) |
| 1000 × 25 = 25000<br>500 × 50 = 25000<br>500 × 100 = 50000 | எவர்சில்வர் தவலை |
| 2000 × 25 = 50000<br>1000 × 50 = 50000 | காப்பர் பாட்டம் பான் (Copper Bottom Pan) |



## N.S.K. ரியல் எஸ்டேட்ஸ்

N.S.K. நகர் — திருநின்றவூர்

- M.M.D.A. எண் P.P.D/LO/10/87
- 1800 சதுர அடி விலை ரூ 20,000
- வல்லக்கோட்டை அருகில் தவணை விற்பனை: ரூ 1500 முதலில் செலுத்தி மீதியை 10 மாத தவணையில் ரூ 200 வீதம் செலுத்தலாம்.


38-B, பர்கிட் சாலை, தி.நகர், சென்னை-600 017.
தொலைபேசி: 442950, 445252, 442106.


வளமான வாழ்க்கைக்கு **N.S.K.**

வில் எழுந்துள்ள தேவிலால் அலையையும், உத்தரப் பிரதேசத்தில் புதிதாக எழுந்துள்ள வி.பி. சிங் அலையையும் சமாளித்து, இ. காங்கிரஸைக் காப்பாற்ற முடியாது என்று காரணம் சொல்லி, மத்தியில் நிதியமைச்சராக இருந்த என்.டி. திவாரியைக் கடந்த ஜூன் 88—ல் உ. பி. முதல்வராக்கி, பிர்பகதூர் சிங்கை மத்தியில் கம்யூனிகேஷன் மினிஸ்டராக்கியது.

ஆனால், இதே காங்கிரஸ் மேலிடம் தான், கடந்த செப்டம்பர் 85—ல் உ.பி. முதல்வராக இருந்த என்.டி. திவாரியை மத்திய அமைச்சராக்கி, பிர்பகதூர் சிங்கை முதல்வராக்கியது என்பதால், அங்கு இப்போது ஏக குளறுபடி. உ. பிரதேச காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பல்ராம் யாதவ், பிர்பகதூர் சிங்கேதான் முதல்வராக நீடிக்க வேண்டுமென்று திவாரிக்கு எதிராகக் கோஷம் போட்டுக் கொண்டிருக்கிறார். பிர்பகதூர் சிங் இன்னமும் தம்மை சி. எம். என்றுதான் சொல்லிக் கொண்டிருக்கிறார். அதற்கு விளக்கம் கேட்டால், கம்யூனிகேஷன் மினிஸ்டர் என்பதைத்தான் இப்படி சுருக்கமாக சி.எம். என்று மற்றவர்கள் குறிப்பிடுகிறார்கள் என்று ஒரே போடாகப் போடுகிறார்!

இப்படி உ.பி.யில் பிரதேச காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பல்ராம் யாதவ் ஒரு தலைவலி என்றால், குஜராத்தில் இளைஞர் காங்கிரஸ் தலைவராக உள்ள சுரேந்திர ராஜ்புட் இன்னொரு தலைவலி. குஜராத் முதல்வர் அமர்சிங் சௌத்ரிக்கு எதிராக இவர் கோஷம் போட்டுக் கொண்டிருக்கிறார். இவருக்கு மற்ற சில உள்ளூர்த் தலைவர்களும் உதவி புரிந்து சுயலாபம் தேடப் பார்க்கிறார்கள். இந்த எதிர்ப்பு என்பது, அமர்சிங் சௌத்ரி முதல்வராக நீடித்தால் வருகிற பட்ஜெட் கூட்டத் தொடரில் தாங்கள் கலந்து கொள்ளப் போவதில்லை என்று அதிருப்தி எம்.எல்.ஏ.க்கள் அறிவிக்கும் அளவுக்குச் சென்றிருக்கிறது. கூடவே முதல்வருக்கு எதிரான எம். எல். ஏ.க்களின் கையெழுத்து வேட்டைகளையும் செய்து கொண்டிருக்கிறார்கள். இதற்கும் காலம் தான் பதில் சொல்ல வேண்டும்.

கடைசியாக மகாராஷ்டிரம். இங்கு சும்மா கிடந்த சங்கை ஊதிக் கெடுத்த கதை காங்கிரஸுக்கு. வழக்கமாக மகாராஷ்டிரத்தில் மூன்று காங்கிரஸ் கோஷ்டிகள். சரத் பவார் தமது கட்சியை இ. காங்கிரஸில் ஐக்கியப்படுத்தி மகாராஷ்டிர முதல்வரானதும், மூன்று கோஷ்டியினரையும் சமதானப்படுத்தி ஒற்றுமையாக்கினார். அவருடைய சாமர்த்தியம் சிவசேனாவுடன் கூட ஒரு நல்லிணக்கச் சூழ்நிலையை உருவாக்கக் கூடும் என்று எதிர்பார்க்கப்பட்டது.

இந்த நிலையில்தான் முன்னாள் முதல்வர் அந்துலேயைக் கட்சியில் மறுபடியும் சேர்த்தது மேலிடம். அந்துலே கட்சிக்குள் வரும் போதே, சரத்பவாருக்கு எதிராகக் குழிபறிக்கத் தேவையான குயுக்திகளோடு தான் வந்தார். எனவே, அந்துலேவிடமிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ள, தற்போது சரத்பவாரும் தமக்கென்று ஒரு கோஷ்டி சேர்க்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாகியிருக்கிறார்.

இவை தவிர ஒரிஸ்ஸா, ராஜஸ்தான் ஆகிய மாநிலங்களிலும் கோஷ்டிப் பூசல்கள் தலையெடுக்க ஆரம்பித்து ராஜீவுக்கு தலைவலியை அதிகப்படுத்தியுள்ளன. ஆக மொத்தம், பார்லிமெண்ட் தேர்தலுக்கு இன்னும் ஓராண்டு கூட முழுமையாக இல்லை என்கிற நிலையில், இ. காங்கிரஸின் நாடு தழுவிய கோஷ்டிப் பூசல்களில் சிக்கித் தவிக்கும் ராஜீவ் எப்படி சமாளிக்கப் போகிறார் என்பது பெரிய கேள்விக்குறியாக விளங்குகிறது. தொடர்ந்து அவர் பிரதமராக நீடிக்க விரும்பினால் நாட்டு மக்களின் நம்பிக்கை வோட்டைப் பெற முற்படுமுன்னர் தமது கட்சியினரின் நம்பிக்கையைப் பெற்றாக வேண்டும். மாநில அளவில் கட்சிக்குள் இப்படி உட்பூசல்கள் இருப்பினும் தேசிய அளவில் நடக்கும் நாடாளுமன்றத் தேர்தலில் எல்லாரும் ஒன்று சேர்ந்து உழைப்பார்கள் என்று கருதுவது மாபெரும் ஏமாற்றமாக முடியக் கூடும்.

— இளங்கோவன்

அட்டை வண்ணப்படம்:
**சைதைமணி**

---

அடுத்த இதழில்...

## சொந்த வீடு: பகல் கனவுதானா..?

'நெருப்புப் பெட்டி மாதிரி அடக்கமாய் ஒரு வீடு; அதில் ஒரு சிறிய சமையலறை... மிளகாய் காய வைக்கச் சதுரமாய் ஒரு சிறிய திறந்தவெளி; குழந்தைகள் படிக்க அமைதியான ஒரு மூலை; காற்றும் வெளிச்சமும் தாராளமாக விழும் ஒரு படுக்கையறை, இவ்வளவும் நமக்கே நமக்கென்று கிடைக்குமா...?' என்று ஏங்கிக்கனவு காணும் பலரது சந்தேகங்களைத் தீர்க்கும் ஒரு கட்டுரை.



# "ராஜீவ் காந்திக்கு வனவாசம் தேவை!"



## —ஹிந்து துணையாசிரியர் ராம் கூறுகிறார்

**கல்கி:** அனைத்திந்திய அளவில் இ. காங்கிரஸுக்குள் நடந்து கொண்டிருக்கும் உட்கட்சிச் சண்டைகளை — கோஷ்டிப் பூசல்களைச் சரிப்படுத்த வேண்டுமென்றால், ராஜீவ் காந்தி என்ன செய்ய வேண்டுமென்று கருதுகிறீர்கள்?

'ஹிந்து' துணை ஆசிரியர் என். ராம்: கடந்த மூன்று நான்காண்டுகளாகவே இ. காங்கிரஸ் கட்சி பெரிய அளவில் சிதைந்து வருவதைத்தான் காண்கிறோம். பல ஆண்டுகளாகவே கட்சிக்குள் தேர்தல்கள் நடத்தப்படவில்லை. கட்சி மேலிடம் நினைத்த நேரத்தில், நினைத்தபடி தனது கட்சி ஆளும் மாநிலங்களில் முதல்வர்களை மாற்றுகிறது. இத்தகைய மாற்றங்களுக்கு மாநிலங்களிலுள்ள கட்சிக்காரர்கள் எதிர்ப்புத் தெரிவிக்க, தில்லி தலைமையானது ஒன்று, அவர்களைப் பயமுறுத்திச் சரணடையச் செய்கிறது; அல்லது அந்த எதிர்ப்புக்குப் பணிந்து போய்விடுகிறது. இதைத்தான் நாம் ராஜீவின் தலைமையில் பார்த்து வருகிறோம்.

இரண்டாவதாகக் கொள்கைகள் என்று எடுத்துக் கொண்டாலும் ராஜீவ் அரசின் கொள்கைகள் நம்பிக்கை அளிப்பனவாக இல்லை. லஞ்ச ஊழல் சம்பந்தப்பட்ட விஷயங்களானாலும் சரி, பாரத ஒருமைப்பாடு தொடர்பான பிரச்னைகளானாலும் சரி, அவரது கொள்கைகளில் பல பலவீனங்கள் உள்ளன. எனவே கட்சிக்குள் நிலவும் அதிருப்தியைச் சமாளித்துக் கட்டிக் காப்பது என்பது அவருக்கு மிகவும் கடினமான விஷயம். இவையெல்லாம் கட்சிக்காரர்களுக்கு மட்டுமே அதிருப்தியைத் தருவன அல்ல, நாடு தழுவிய அளவில் மக்களிடமும் அதிருப்தியை ஏற்படுத்தியுள்ளன. அதனால் காங்கிரஸின் வெற்றி வாய்ப்புக்கள் நலிவடைந்து வருகின்றன. இந்தத் தேர்தல் ஆண்டில் காங்கிரஸ் பெரும் சோதனைக்கு உள்ளாகியிருக்கிறது. இந்த நிலைமையை மாற்றி, கொள்கைகளில் அபிவிருத்தி காண அது ஏதும் செய்யவில்லை. நிலைமை இன்னும் மோசமாகிக் கொண்டேதான் போகிறது. கொள்கைகள் தவிர, கட்சியைச் சேர்ந்த தனி நபர்கள் விஷயத்தில் காங்கிரஸ் தலைமை நடந்து கொள்ளும் விதமும் அதிருப்தியை அதிகரிக்கச் செய்கிறது.

காங்கிரஸுக்கு உள்ள இன்னொரு பெரிய அபாயம் அதனால் வெற்றி பெற முடியுமா என்ற சந்தேகக் கேள்வி கட்சிக்குள்ளேயே எழுந்திருப்பதுதான். நாகாலாந்து — மிஸோராமில் காங்கிரஸ் வெற்றி பெற்றிருந்த போதிலும் தமிழ்நாட்டில் மாபெரும் தோல்வியை காங்கிரஸ் அடைந்திருக்கிறது. பல இடங்களில் இடைத் தேர்தல்களைச் சந்திக்க அஞ்சி ஏதேதோ காரணங்களைக் கூறி அவை ஒத்திப்போடப்படுகின்றன. 'காங்கிரஸின் வெற்றி வாய்ப்புக்கள் குறைகின்றன; தங்கள் தலைவரால் வெற்றிக் கனியைப் பறித்துத் தர முடியாது' என்ற எண்ணம் காங்கிரஸ் தொண்டர்களிடம் பரவும் போது, அவர்கள் உற்சாகம் இழக்க, அது மேலும் தோல்விகளுக்கே வழிவகுக்கும். இது மனோதத்துவ ரீதியானது.

**கல்கி:** கட்சி மேலிடம் தன்னிஷ்டத்திற்கு மாநில முதல்வர்களை மாற்றுவதாகச் சொல்கிறீர்கள். ஆனால், மத்திய பிரதேச முதல்வராக இருந்த அர்ஜுன் சிங் மீது உயர்நீதி மன்றமே ஊழலை உறுதிப்படுத்தித் தீர்ப்பு வழங்கிய போதும், அம் மாநில எம்.எல்.ஏக்கள் அவருக்குத்தானே ஆதரவாக இருந்தார்கள். மேலிடம்தானே மாற்றியது. அதில் எந்தத் தவறும் இல்லையே?

ராம்: அர்ஜுன் சிங்கை நீக்கியதற்காக நாம் ராஜீவைப் பாராட்ட வேண்டும். ஆனால், இதே அளவுகோல் மற்றவர்கள் விஷயங்களில் கடைபிடிக்கப்படுவதில்லையே! உதாரணத்திற்கு மத்திய அமைச்சர் சிவசங்கரை எடுத்துக் கொள்ளுங்கள்... அண்மையில் விஜயவாடாவில் நடந்த மிக மோசமான நிகழ்ச்சிகளைத் தடுத்து நிறுத்தி அமைதி திரும்ப முயற்சி செய்ய வேண்டிய நேரத்தில் அவர் மிகவும் பொறுப்பற்ற

முறையில்தான் பேசியிருக்கிறார். பத்திரிகை ஆசிரியர்கள் சங்கத்தின் பிரதிநிதிக் குழுவில் ஒருவனாக நானும் அந்தச் சமயத்தில் விஜய வாடாவுக்குச் சென்றிருந்தேன். பல பத்திரிகையாளர்களோடு பேசினேன். சிவசங்கர் ஒரு பத்திரிகையாளர் சந்திப்பில், ஐம்பது பேர் சுடப்பட்டு 'பந்தர்' கால் வாயில் வீசியெறிப்பட்டதாக ஓர் உயர் போலீஸ் அதிகாரியே தம்மிடம் சொன்னதாகத் தெரிவித்திருக்கிறார். இந்த ஒரு பொறுப்பற்ற வாக்கியமே போதும் சிவசங்கரை அமைச்சர் பதவியிலிருந்து டிஸ்மிஸ் செய்ய. ஆனால் செய்யவில்லையே! நீர்மூழ்கி பேரம், போஃபர்ஸ் விவகாரம் ஆகியவற்றில் ஊழல் நடந்திருப்பதற்கான பூர்வாங்க ஆதாரங்கள் இருந்தபோதிலும் அது தொடர்பாக யார் மீதும் எந்தவித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லையே! பூசி மொழுகுவது ஏன்? இதையெல்லாம் பார்க்கும் போது, அர்ஜுன் சிங்கை மட்டும் அவசரம் அவசரமாக நீக்கியது, மேம்போக்காகத் தோன்றுவது போல் நியாயமான காரணத்துக்காக எடுக்கப்பட்ட சரியான முடிவு அல்ல; இதற்கு வேறு ஏதோ பதற்றமும் பயமுமே உண்மைக் காரணம் என்று பலர் முடிவுக்கு வர இடமளிக்கிறது. இன்னொரு விஷயம். மாநில முதல்வராக இருப்பதற்கு லாயக்கில்லை என்று பதவி நீக்கம் செய்யப்படுகிற ஒருவர் உடனே மத்தியில் அமைச்சராக்கப்படுவதை எப்படிப் புரிந்து கொள்வது? அல்லது மத்திய அமைச்சரவையிலிருந்து நீக்கப்படுகிறவருக்கு மாநில முதல்வர் பதவி வழங்கப்படுவதை எப்படி நாம் ஏற்பது?! காங்கிரஸ் தலைமையின் இத்தகைய போக்கு அனைவருக்கும் கவலையளிப்பதாகும்.

*கல்கி:* இந்திரா காந்தியின் அணுகுமுறைக்கும் ராஜீவ் காந்தியின் அணுகுமுறைக்கும் என்ன வித்தியாசத்தைக் காண்கிறீர்கள்?

*ராம்:* இந்திரா காந்தியின் சில கொள்கைகளும் எமர்ஜென்ஸியைக் கொண்டு வந்தது போன்ற பல செயல்களும் கண்டனங்களையும் காரசாரமான விமர்சனங்களையும் பெற்றிருந்தாலும், அவர் ஒரு சிறந்த ராஜதந்திரி என்பதும் அயல்நாட்டுக் கொள்கைகளில் ஆற்றல் மிக்கவர் என்பதும் அவரை விமர்சித்தவர்களாலேயே ஒப்புக் கொள்ளப்பட்டவை. மக்களால் எளிதில் அணுகப்படக் கூடியவராக அவர் விளங்கினார். இவ்விஷயங்களில் ராஜீவ் காந்தியை விடப் பல மடங்கு அவர் உயர்ந்தவர். பிரதமர் பதவியில் ராஜீவ் காந்தியின் ஆரம்ப நாட்களும் நன்றாகத்தான் இருந்தன. மக்களுடைய நல்லெண்ணத்தை அமோகமாகப் பெற்றிருந்தார். சொல்லப் போனால் சில விஷயங்களில் அவருடைய தாயாரை விடவும் அதிகமான மதிப்பைப் பெற்றிருந்தார். ஆனால் போகப் போக நிலைமை அடியோடு மாறி விட்டது.

*கல்கி:* கட்சித் தலைவர் என்ற முறையில் இருவரது செயல்பாடுகள் பற்றி என்ன எண்ணுகிறீர்கள்?

*ராம்:* இந்திரா காந்தி காலத்தில்தான் கட்சியின் அஸ்திவாரம் ஆட்டம் காண ஆரம்பித்தது. நேரு காலத்திலேயே வீழ்ச்சிக்கான அறிகுறிகள் தென்பட்டன என்றாலும் இந்திரா காலத்தில்தான் கட்சிக்கும் அரசுக்கும் உள்ள உறவு, கட்சிக்கும் அதிகாரிகளுக்கும் உள்ள உறவு – இவை தடம்புரண்டு, தகாத வழிகளில் செல்ல ஆரம்பித்தன. நாற்றமெடுக்க ஆரம்பித்தது என்றே சொல்லலாம். ஆனாலும் அவருக்கிருந்த வேறு பல திறமைகளை நாம் குறைத்து மதிப்பிட்டு விட முடியாது. கட்சியையும் ஒருவாறு கட்டிக் காத்து வந்தார். இந்திரா காலத்தில் ஆரம்பமான சிதைவுதான் இன்றும் தொடர்கிறது என்பதை மறுப்பதற்கில்லை. எல்லாவற்றுக்கும் ராஜீவ் மீதே முழுப் பழியும் சுமத்த முடியாது.

*கல்கி:* ஆக, இந்திரா காந்தி கட்சியைக் கட்டிக் காப்பதில் சந்தித்த பிரச்னைகளைத்தான் இன்றும் ராஜீவ் சந்தித்து வருகிறார் என்று கூறலாமா?

*ராம்:* சரித்திரம் திரும்புகிறது என்று கூறுகிறவர்கள் இன்னொன்றும் சொல்வார்கள். முதல் தடவை சரித்திரம் திரும்பும் போது அது துயரகரமாக இருக்கும்; இரண்டாம் முறை திரும்பும் போது அது கோமாளித்தனமாக இருக்கும் என்பார்கள். நேருவுக்குப் பின் இந்திரா காலத்திலும் இந்திராவுக்குப் பின் ராஜீவ் காலத்திலும் சரித்திரம் திரும்புவதைப் பார்க்க அதுதான் நினைவுக்கு வருகிறது!

*கல்கி:* வரப் போகும் நாடாளுமன்றத் தேர்தலில் இவையெல்லாம் ராஜீவைப் பாதிக்குமா? அதற்குள் அவரால் நிலைமையைச் சீர்ப்படுத்த முடியாதா?

*ராம்:* இந்நிலை நீடித்தால் தோற்றுத்தான் போவார். உட்கட்சி பூசல்கள் அதிகரிக்கும். இதை ஏதோ அவரை எதிர்க்க வேண்டும் என்பதற்காக நான் சொல்லவில்லை. பிரச்னைகளைப் பார்க்கிறோம்; காங்கிரஸில் நடப்பதை ஆராய்கிறோம்; மக்களிடம் அதன் பாதிப்பு என்ன என்பதைக் கணிக்கிறோம்; எதிர்க் கட்சிகள் என்ன சொல்கின்றன, செய்கின்றன என்பதைப் பார்க்கிறோம்; பிறகு யதார்த்த நோக்கில் சொல்கிறோம். காங்கிரஸ் மிகப் பெரிய ஆபத்தில் சிக்கியுள்ளது. நிலைமையைச் சீர்ப்படுத்த முடியுமா என்று கேட்டால் தேர்தலுக்கு முன் அதற்கு அவருக்குப் போதிய அவகாசம் இல்லை என்பதுதான் பதில். இந்தத் தேர்தலில் தோற்று, அவர் ஒரு கால கட்டத்துக்கு வனவாசம் மேற்கொண்டு ஆன்ம பரிசோதனைக்குத் தம்மை உட்படுத்திக் கொள்ள வேண்டும். பதவியினால் ஏற்படக் கூடிய கவர்ச்சிகள் இல்லாத நிலையில்தான் காங்கிரஸ்காரர்களால் தங்களைத் தாங்களே திருத்திக் கொள்ள முடியும்.

படம்: 'சுபா' ரவிஷங்கர்

புதிய அமைச்சர்கள்

பதவிப் பிரமாணம் எடுத்துக்கிட்டாச் சுல்லே... இந்தாங்க ராஜினாமா கடிதத்திலே கையெழுத்துப் போட்டுக் கொடுங்க!

ராமராவ்









கல்கி

1989 பிப்ரவரி 26
மலர் 47 இதழ் 30
விபவ மாசி 15




# என். டி. ஆரின் எதேச்சாதிகாரப் போக்கு!

**என்**. டி. ராமராவின் புதிய அமைச்சரவை பதவி ஏற்றுவிட்டது. முன்னைவிடக் குறைந்த அளவில் அமைச்சர்களையுடைய கச்சிதமான அமைச்சரவையாகவும் இது இருக்கிறது. என்றாலும், புதிய அமைச்சரவை உருவானதற்கான பின்னணி பெருமைப்படத் தக்கதாக இல்லை.

பட்ஜெட் ரகசியங்கள் சில அம்பலமாகிவிட்டன என்பதற்காக என். டி. ஆர்., தம்மைத் தவிர அமைச்சரவையைச் சேர்ந்த மற்ற அனைவரது ராஜினாமாவையும் கோரிப் பெற்றார். பட்ஜெட் ரகசியங்கள் வெளியானால், அதற்கு நிதி அமைச்சர் பொறுப்பேற்பதுதான் இங்கு மட்டுமல்ல, அயல்நாட்டு ஜனநாயகங்களிலும் இருந்து வரும் மரபு. மந்திரி சபைதான் எல்லாவற்றுக்கும் கூட்டுப் பொறுப்பு ஏற்க வேண்டும் என்றால், என். டி. ஆரும் அதில் உள்ளடங்கியவராகிறார். தம்மையும் சேர்த்துக் கொண்டு அவர் அமைச்சரவையின் ராஜினாமாவையே சமர்ப்பித்திருக்க வேண்டும். ஆனால் ராமராவ் அமைச்சரவையின் ராஜினாமாவைச் சமர்ப்பிக்காமல், அமைச்சர்களின் ராஜினாமாக்களை மட்டும் கோரிப் பெற்றிருக்கிறார். எனவே, என். டி. ஆர். அமைச்சரவையைத் திருத்தி அமைக்கக் கருதி நல்வாய்ப்பை எதிர்பார்த்திருந்தார்; பட்ஜெட் ரகசியம் வெளியானது வசதியாகப் போயிற்று என்று நம்ப இடமிருக்கிறது. எல்லா அமைச்சர்களின் பொறுப்புக்களையும் தாமே ஏற்றுக் கொண்டு, தில்லியில் சில தினங்கள், அஸ்ஸாமில் சில நாட்கள் என்று சாவகாசமாகக் கழித்துவிட்டு மாநிலத்துக்குத் திரும்பினார். மொத்தத்தில் ஒரு வாரத்திற்குப் பிறகு புதிய அமைச்சரவை பொறுப்பேற்றுள்ளது.

இவற்றிலெல்லாம் சட்டரீதியாகத் தவறு ஏதும் இல்லாதிருக்கலாம். ஆனால் ஜனநாயகப் பண்புகளுக்கும் மரபுகளுக்கும் இந்தப் போக்கு முரணானது. இங்கே எப்படி, 'எம். ஜி. ஆர்.தான் ஹீரோ, மற்ற எல்லாரும் ஜீரோ' என்கிற நிலையே கடைசி வரை இருந்ததோ, அதே நிலைதான் ஆந்திராவிலும் உள்ளது என்பதையே இந்த நிகழ்ச்சிகள் உணர்த்துகின்றன. என். டி. ஆர். என்ற திரைப்பட நடிகருக்கு மக்களிடையே இருந்த மகத்தான செல்வாக்கு ஒருபுறம், காங்கிரஸின் மாபெரும் தவறுகள் மறுபுறம் என்ற சூழ்நிலைதான் தெலுங்குதேசம் கட்சியை ஆட்சிக்குக் கொண்டு வந்தது என்றாலும், ஆட்சிக்கு வந்த பிறகேனும் என். டி. ஆர்., நல்ல தளபதிகளை உருவாக்கி, அவர்களுக்கு மக்களிடையே மதிப்பும் மரியாதையும் பெருகச் செய்திருக்க வேண்டும். ஆனால், தம்மைத் தவிர மற்றவர்கள் வளர்ந்து விடாமல் தடுத்து, தம்மை மட்டுமே ஸ்திரப்படுத்திக் கொள்வதே தொடர்கிறது. தமது முக்கியத்துவம் எங்கே குறைந்து போய் விடுமோ என்ற அச்சம் நிலவுவதாகத் தோன்றுகிறது. இது தேவையற்ற ஒரு தாழ்வு மனப்பான்மையின் விளைவாக இருக்கலாம். திடீரென்று பதவிக்கு வந்துவிடுகிற தலைவர்கள் இப்படிச் சங்கடப்படுவது இயல்பு.

தனிநபர் ஆட்சிக்கு வழிவகுக்கும் தனிநபர் வழிபாடு, ஜனநாயகத்தில் ஆரோக்கியமானதல்ல. அது ஜனநாயகப் போர்வையில் நடக்கும் எதேச்சாதிகார ஆட்சியாகவே விளங்கும். இத்தகைய எதேச்சாதிகாரப் போக்குக் கொண்டவர்தான் தேசிய முன்னணியின் அமைப்பாளர், தலைவர் என்பதை நினைக்க, ஆந்திர அரசியலைப் பற்றி மட்டுமின்றி நாடு தழுவிய அளவிலும் நமக்கு எதிர்காலம் பற்றிய கவலை உண்டாகிறது.

புதிய ஆந்திர அமைச்சரவையில் பழைய மந்திரிகள் யாரும் இல்லை. "அதனாலென்ன, ஓர் அணி ஆடித் திரும்பியது; இன்னொரு அணி ஆடக் களம் புகுந்திருக்கிறது" என்று ஒரு மாஜி அமைச்சர் 'ஸ்போர்ட்டிவ்'வாகச் சொல்லியிருக்கிறார். ஆனால் இந்த இரு அணிகளும் பொது எதிரியைச் சந்திப்பதற்குப் பதிலாக, ஒன்றோடொன்று மோத ஆரம்பித்தால் என்ன செய்வது? அப்போது, எம். ஜி. ஆருக்குப் பிறகு அ. தி. மு. க. வுக்கு நேர்ந்த கதிதான் என். டி. ஆருக்குப் பிறகு தெலுங்கு தேசத்துக்கும் ஏற்படும். இதனைத் தவிர்க்க, என். டி. ஆர். புத்திசாலித்தனமாக இப்போதே செயல்பட்டால்தான் உண்டு.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

## நீங்கள் கேட்டவை — தராசு



நூற்றாண்டு காண்கிறார்!



விட்டுக் கொடுத்தார்!

* அ. நாராயணன், சென்னை.

? தேசிய முன்னணித் தலைவர்கள் கருணாநிதிக்கு தில்லியில் மாலை அணிவித்து மரியாதை செய்திருக்கிறார்களே?

! தமிழ்நாடு தேர்தல் வெற்றி, தாங்கள் மார் தட்டியது போல் தேசிய முன்னணியின் வெற்றி அல்ல என்றும் கருணாநிதியின் வெற்றியே என்றும் இந்த நிகழ்ச்சியின் மூலம் ஒப்புதல் வாக்குமூலம் தந்திருக்கிறார்கள். தமிழகத் தேர்தல் வெற்றி, தேசிய முன்னணியின் வெற்றி எனில் கருணாநிதி அல்லவோ இதர தலைவர்களுக்கு மாலையிட்டு மரியாதை செய்திருக்க வேண்டும்!

* இடலை கதா, குளத்தூர்.

? 'மருத்துவச் சிகிச்சைக்காக வெளிநாடு செல்ல அரசியல்வாதிகளுக்கு அனுமதி மறுக்கப்பட வேண்டும். அப்போதுதான் இந்திய மருத்துவப் பணிகளின் தரம் உயரும்' என்று டாக்டர் புச்சி பாபு கூறியிருப்பது பற்றி?

! இந்தியத் தலைவர்கள் யாருக்கும் இன்று பெரிய அளவில் மருத்துவச் சிகிச்சை தேவைப்படவில்லை. எனவே புச்சி பாபுவின் கருத்துக்கு இப்போதைக்கு எல்லாரும் தலையாட்டி வைப்பார்கள்!

* என். ஆர். சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.

? வருங்காலப் பிரதமர் யார்?

! நிலையான ஆட்சி வழங்கக் கூடியவராகவும், ஜனநாயக மரபுகளை மதிப்பவராகவும், தொலைநோக்கு உடையவராகவும், தூய்மையானவராகவும், நாட்டில் தொழில்—வர்த்தகம் — கல்வி ஆகியன சிறப்பெய்தும் விதமாகச் செயல்படுகிறவராகவும் உள்ள ஒருவர்! இப்படிப்பட்ட ஒருவர் வருங்காலத்தில் என்றேனும் ஒருநாள் வராமலா போய் விடுவார்?

* ஆர். ரத்தினசாமி, புன்செய் புளியம்பட்டி:

? ஆச்சாரிய கிருபளானியின் நூற்றாண்டு விழாவை அரசு மறந்ததற்குக் காரணம்...?

! அதை நாம் கொண்டாடாமல் இருப்பதுதான் கிருபளானிக்கு நாம் அளிக்கக் கூடிய மிகப் பெரிய கௌரவம் என்பதை இந்த அரசு புரிந்து கொண்டிருப்பதுதான் காரணமாயிருக்க வேண்டும்!

* ஆர். ஆறுமுகம், மதுரை.

? ஆர். தேவேந்திரன் கேட்டுள்ள கேள்விக்கு நீங்கள் அளித்துள்ள பதில் நடுநிலையானதுதானா?

! ஜெயலலிதாவிடம் தராசுவுக்குத் தனிப்பட்ட முறையில் எந்தவிதக் காழ்ப்புணர்ச்சியும் கிடையாது. அவர் எதிர்க்கட்சித் தலைவர் என்ற அளவில் கூடச் சிறப்பான பணியாற்ற மாட்டார் என்ற தராசுவின் கருத்து பொய்த்துப் போனால் தராசுவை விட மகிழ்ச்சி அடைபவர் வேறு யாரும் இருக்க முடியாது. ஆனால் அவ்வாறு நடக்கும் என்பதற்கான அறிகுறி ஏதும் இந்நாள் வரை நமக்குக் கிடைக்கவில்லை.

* ஸ்ரீ மனோபாரதி, பாண்டிச்சேரி.

? எம். ஜி. ஆரின் உண்மையான வாரிசு யார் என்ற குழப்பம் ஏன் இன்னும் தீரவில்லை?

! அவருக்கு அரசியல் வாரிசு என்று யாரும் இல்லாததுதான் காரணம். சொத்துக்கு வாரிசு கொண்டாடலாம். ஜனநாயகத்தில் ஆட்சித் தலைமைக்கு அல்லது கட்சித் தலைமைக்கு வாரிசு உரிமை கொண்டாட முடியாது. இதைப் புரிந்து கொள்ளாததுதான் அ. தி. மு. க. தலைவர்களின் மிகப் பெரிய தவறு. எம். ஜி. ஆரின் புகழ் என்ற பட்டாடையைத் தங்கள் மீது போர்த்திக் கொண்டு அரியாசனம் ஏறிவிடலாம் என்று ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள். மக்கள் இதை அனுமதிக்க மாட்டார்கள், அனுமதிக்கவும் கூடாது. அடிமட்டத்

# ஜெ-ஜா இணைப்பு நாடகத்தின் இயக்குனர் யார்?



பெற்றுக் கொண்டார்!



ஏற்றுக் கொள்கிறார்!

திலிருந்து படிப்படியாக உழைத்து முன்னேறி வருகிற ஒருவன்தான் பண்பட்ட தலைவனாக விளங்க முடியும். திணிக்கப்படுகிற அல்லது தன்னைத்தானே திணித்துக் கொள்கிற தலைமை திணறவே செய்யும்.

* கே. எஸ். காமில்ராஜா, தேரிழந்தூர்.

? தமிழக எழுத்தாளர்கள் ஒரு நாவல் எழுத ஒன்றரைக் கோடி ரூபாய் அட்வான்ஸ் எப்போது வாங்குவார்கள்?

! இந்தியா, அமெரிக்கா அளவுக்குச் செல்வச் செழிப்பும், கல்வித் தேர்ச்சியும் பெறும் போது.

* இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? ராஜீவ்காந்தியின் சீன நாட்டு விஜயத்துக்கும் பேநசீரின் விஜயத்துக்கும் வித்தியாசம் என்ன?

! அவர் விட்டுக் கொடுத்துவிட்டு வந்தார்; ('பழசை மறப்போம்') இவர் பெற்றுக் கொண்டு சென்றார்! (போர் விமானங்களை.)

* எஸ். பாலமுருகன், விழுப்புரம்.

? நாவலர் நெடுஞ்செழியனைப் பற்றித் தமாஷாக ஏதாவது சொல்லுங்களேன்?

! அவரைப் பற்றி மட்டுமென்ன, மூலைக்கொருவராகச் சிதறி இருக்கும் அ. தி. மு. க. தலைவர்களையும் அவர்களது சொற்களையும் செயல்களையும் நினைத்தாலே தமாஷாகத்தான் இருக்கிறது; அதற்குமேல் நான் வேறு சொல்ல வேண்டுமா, என்ன?

* எம். ஏ. பாஷா, கடலூர்.

? ஜெயலலிதா — ஜானகி இணைப்பு நாடகத்தின் இயக்குனர் யார்?

! திருவாளர் சுயநலம்.

* க. தியாகராசன், நெய்வேலி.

? சட்டமன்ற இடைத் தேர்தல் பிரசாரத்துக்கு ராஜீவ் காந்தி வருவாரா?

! ஊகும். முழுக்க நனைந்த பிறகு முட்டாக்கு எதற்கு என்று விட்டுவிடுவார். என்றாலும் காங்கிரஸ் வேட்பாளர்களை ஆதரித்து வாக்காளர்களின் இதயத்தைத் தொடுகிற முறையில் ஓர் அறிக்கையாவது அவர் டேப் செய்து அனுப்ப வேண்டும்.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? "கறுப்பு எருமை ஒன்று, கறுப்புப் புள்ளிகளை உடைய பசுவைப் பார்த்து, 'கறுப்பு நிறமுடையது' என்று கூறுவதைப் போல எதிர்க்கட்சித் தலைவர்கள் மீது ராஜீவ் காந்தி ஊழல் புகார் கூறுகிறார்" என்று ராம்ஜெத்மலானி கூறுகிறாரே?



சிக்கச் செய்கிறார்!



முனைந்து நிற்கிறார்!

! ஆக மொத்தம், தூய வெள்ளைப் பசு எதிர்க்கட்சிகளிலும் இல்லை என்று ஒப்புக் கொள்கிறார் அல்லவா? அதற்காக அவரைப் பாராட்டத்தான் வேண்டும்!

* ஆ. மோகன்குமார், நீடாமங்கலம்.*

? பாகிஸ்தான் ஏவுகணைகள், அணுகுண்டு என்று மும்முரமாய் உள்ளது பற்றி...?

! "இந்தியா — பாகிஸ்தான் ஆகிய இரு நாடுகளுமே தேவையின்றிப் பாதுகாப்புச் செலவினங்களை அதிகரித்துக் கொண்டே போகின்றன. பரஸ்பரம் நல்லெண்ணத்தின் அடிப்படையில் இதைக் குறைத்துக் கொள்ளலாம். இதற்கு என் உதவி வேண்டப்பட்டால் நான் உதவத் தயார்" என்று ஆஸ்திரேலிய அதிபர் இந்தியா வந்தபோது கூறியது, அட்சரலட்சம் பெறக் கூடிய அறிவுரை. இதனால் மிச்சமாகும் பணத்தை இரு நாடுகளுமே இதர முக்கியமான அபிவிருத்தித் திட்டங்களுக்குச் செலவிட்டு, தொழில் — வர்த்தக — வேலை வாய்ப்பு முன்னேற்றத்துக்கு உதவலாம். அமெரிக்க அதிபரே (ஜார்ஜ் புஷ்) 'ஓராண்டுக்குப் பாதுகாப்புத் துறைக்கு நிதி ஒதுக்கீடு இல்லை' என்று அறிவித்து, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் முனைந்து நிற்பது கவனத்துக்குரியது.

* இளங்கோ, ஆட்டையாம்பட்டி.

? அடை மழைக்குக் குடையில்லாதவன் அடுத்தவனுக்குக் குடை பிடிக்கலாமா?

! அரசாங்கத்தின் பல்வேறு துறையினருக்கும் அண்மையில் ராஜீவ் காந்தி சிக்கன உபதேசம் பண்ணியிருப்பதைப் பார்க்கும் போது, உங்கள் கேள்விக்கு 'அதுவும் சாத்தியம்தான்' என்பதே பதில்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஆர். மோகன்குமார்,
அமுதா மருந்தகம்,
நீடாமங்கலம் — 614 404.

மடமையைக் கொளுத்துவோம்!



# பெண்களின் அறிவைப் பின்னுக்குத் தள்ளும் நிறுவனங்கள்...



**கா**ரியதரிசி வேலைக்கு வருகிற ஒரு பெண் திறமைசாலியாக இருக்கிறாளா, சுறுசுறுப்புடன் செயல்படுகிறாளா என்றுதான் பார்க்க வேண்டுமே தவிர, குட் லுக்கிங் (பார்வைக்கு அழகாக) இருக்க வேண்டும் என்று நிறுவனங்கள் விளம்பரம் செய்வது அபத்தமாக இல்லையா?

அழகு முக்கியம் என்று குறிப்பிடுவதே பெண்மையை இழிவு செய்வது போல் ஆகாதா? இதை எப்படி ஒத்துக் கொள்ள முடியும்?

— 'ஈவ்ஸ் வீக்லி' இதழில் ஆஷா சர்வோத்தம் என்கிற பெண்மணி இது பற்றிக் கொதித்துப் போய் எழுதியிருந்த கடிதத்தைப் படித்தேன்...

சதையிலும், விசாலமான கண்களிலும், வெளுத்த தோலிலும் என்ன இருக்கிறது?

அப்படிப் பார்த்துப் பொறுக்கினால் — மிச்ச பெண்களின் — படித்துப் பட்டம் பெற்றதுடன் நில்லாமல் அதில் தங்கப் பதக்கங்கள் வாங்கிய பெண்களின் கதி என்ன?

திறமைக்கும், கல்வித் தகுதிக்கும், ஏற்றவாறு நிறுவனங்கள் வேலை கொடுக்க முன் வர வேண்டும்.

இன்னொன்றைக் கவனித்தீர்களா...

இந்த 'குட் லுக்கிங்' பதப் பிரயோகம் பெண்களுக்கு மட்டும்தான். ஆண்களுக்கு இல்லை!

எனக்குத் தெரிந்த நண்பர் ஒருவர் பெரிய நிறுவனத்தின் ஜி.எம்.மாக இருக்கிறார். அவர்தான் அந்த நிறுவனத்தின் முதுகெலும்பே. கறுப்பாக — அம்மைத் தழும்பு முகமாக இருப்பார். அவரது கார் டிரைவர் மங்களூர்க்காரர். கிள்ளினால் ரத்தம் தெரிகிற சிவப்பு. வாட்ட சாட்டமாய் — ஏதோ ஒரு கன்னட நடிகரின் சாயலில்...

'குட் லுக்கிங்' படி பார்க்கப் போனால் — இந்த டிரைவரிடம் ஜெனரல் மானேஜர் பதவியை அல்லவா ஒப்படைக்க வேண்டும்?

இது சாத்தியமில்லை என்பது புரிகிற போது, பெண்கள் மட்டும் பார்வைக்கு அழகாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடுவது மட்டும் புரியாமலா போய் விடும்?

இதற்குப் பெண்களே ஒத்துக் கொள்ளக் கூடாது. அழகான பெண்களை வரவேற்பாளர்களாக வைத்து, டைப்பிஸ்ட்களாக வைத்து வியாபாரம் செய்ய நினைப்பவர்கள் எத்தனை கீழ்த்தரமான புத்தியுள்ளவர்கள், என்பதை முதலில் பெண்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

குயில் கருப்புத்தான் — குரல் மதுரமாக இல்லையா?

கரும்பு கோணல் என்றால் — சுவையுமா மாறியிருக்கிறது?

## நேர் முக(ம்)தேர்வு!



பெண்களைப் பெண்களாக மதித்து, இது போன்ற நிறுவனங்களை நடத்துபவர்களைப் பெற்றவளும் பெண்தான், இவர்களுக்குப் பிறந்தவர்களும் பெண்தான் என்பதைச் சிந்தித்து என்றைக்கு இவர்கள் செயல்படுகிறார்களோ... அன்றைக்குத்தான் நாடு உருப்படும்!

அந்தக் காலம் விரைவில் வர, பெண்களாகிய நாம்தான் புரட்சிக் குரல் எழுப்ப வேண்டும்!

— அனுராதா ரமணன்

உங்கள் சேமிப்பின் பாதுகாப்புக்கு
சக்தியை நாடினீர்கள்.

இப்போது உங்களுடைய
விலை உயர்ந்த உடைமைகளின்
பாதுகாப்புக்கு...

# சக்தி பாதுகாப்புப் பெட்டகங்கள்

தாராளமான இட வசதி; ஏர்-கண்டிஷண்ட்; நவீன அமைப்பு; வங்கிகள் பின்பற்றும் வரைமுறைகளைக் கடைப்பிடித்துக் கட்டப்பட்டது; திருட்டைத் தடுக்க அலாரம் மணியோசை; பூரண பாதுகாப்பு; அனுபவம்மிக்க பெண்களின் திறமைமிக்க சேவை; உங்கள் வசதிக்காகக் கூடுதலான வேலை நேரம். இங்கே உங்கள் அலுவல் முற்றிலும் அந்தரங்கமாக இருக்க ஏற்ற சூழ்நிலை; இனிய, மெல்லிய இசையும் உண்டு --- இவை அனைத்துக்கும் கட்டணமாக ஆண்டு வாடகை மிகமிகக் குறைவு.




சக்தி பாதுகாப்புப் பெட்டகங்கள்,

## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

கீழ்க்கண்ட கிளைகளில் உள்ளன:

தமிழ்நாடு: கோயம்புத்தூர்: ஆர்.எஸ்.புரம், அவினாசி சாலை,
சென்னை: தி.நகர், அடையாறு, அசோக் நகர், அண்ணா நகர், மைலாப்பூர், காரைக்குடி, மதுரை (அண்ணா நகர்), பொள்ளாச்சி சேலம், திருநெல்வேலி, தூத்துக்குடி.
கேரளம்: எர்ணாகுளம், பாலக்காடு, திருவனந்தபுரம், திருச்சூர்.
கர்நாடகம்: பெங்களூர் (ரிச்மண்ட் சாலை)
மஹாராஷ்டிரா: பம்பாய் (செம்பூர்)

---

**விரைவில் ஈரோடு, சென்னை (ஜி.டி.), பம்பாய் (சான்டா குரூஸ்), புதுடில்லி ஆகிய இடங்களில் சக்தி பாதுகாப்புப் பெட்டகங்கள் அமைக்கப்படும்.**

UIPC:SF:1:89

**ச**ந்தேகத்திற்கு இடமில்லாமல் அது சுகன்யாதான் என்று தெரிந்து விட்டது அவனுக்கு.

சூழ்நிலை மறந்து யாரோ ஓர் இளைஞனுடன் பேச்சில் லயித்திருந்தாள்.

மனசுக்குள் சுரீலென்றது. யார் அவன்? இவளுக்கு அவனுடன் என்ன பேச்சு?

கூட்டத்தில் ஊடுருவி அருகில் நெருங்கிய போது இளைஞன் விடைபெற்றுப் போனதைத்தான் பார்க்க முடிந்தது. சுகன்யாவும் இவன் வருவதைக் கவனிக்காமல் எதிர்த் திசையில் நகர்ந்து போனாள்.

வேறு வழியின்றிக் காந்தி மார்க்கெட்டிற்குள் நுழைந்தான். அலுவலகம் முடிந்து திரும்பும் போது, வாரத்தில் இரண்டு முறை, விலை சகாயம் என்பதால், இங்கு வந்து கறிகாய் வாங்கி வருவான். புறநகர்ப் பகுதியில் கிடைக்காத சௌகரியங்கள்.

வாய் இயந்திரமாய் விலை விசாரித்துக் கறிகாய் வாங்க, மனசுக்குள் தங்கையின் போக்குத்தான் உறுத்திக் கொண்டிருந்தது.

**மூ**ன்று மாதங்களுக்கு முன்பிருந்துதான் வேலைக்குப் போக ஆரம்பித்தாள்.

அப்பா ஓய்வு பெற்ற போது கிடைத்த பணத்தில் பாதி, இவன் புதிதாகக் கட்டிய வீட்டில் முடங்க, சுகன்யாவின் திருமணம் மேலும் தள்ளிப் போனது. வீட்டில் சும்மா இருப்பதற்கு வேலைக்குப் போகிறேன் என்று ஏதேதோ தேர்வு எழுதினாள். வேலையும் கிடைத்துப் போக ஆரம்பித்தாள்.

வீடு கூட இத்தனை அவசரப்பட்டுக் கட்டியிருக்க மாட்டான். நண்பர்களுடன் சேர்ந்து விளையாட்டாக ஒரு பிளாட் வாங்கியிருந்தான். அவர்களில் சிலர் கட்டவும் ஆரம்பித்து விட்டனர். கம்பெனி கடனும் கணிசமாகக் கிடைத்தது.

தயங்கியவனை அவர்கள்தான் தூண்டினார்கள்.

'சொந்த வீடு இருந்தாலே பிளஸ் பாயிண்ட். உனக்குப் பெண் பார்த்தா... அப்பப் புரியும் அதோட அருமை...'

வாஸ்தவம்தான். மணமான புதிதில் பானு அதைத்தான் சொன்னாள்.

'எங்க வீட்டுல உங்களைப் பிடிச்சுப் போனதுக்குக் காரணமே சொந்த வீடுதான். எங்கக்கா ரெண்டு பேருமே வாடகை வீட்டுல... கூட்டுக் குடித்தனத்துல ரொம்பக் கஷ்டப்படறாங்க...'

கடைசியில் இவன் சௌகர்யத்திற்காகச் சுகன்யாவின் கல்யாணம் தள்ளிப் போனது.

சுகன்யா தவறாகப் போக மாட்டாள்தான். ஆனால் இந்த வயதில் வரும் ஆசைகளுக்கு, அதுவும் கண்ணெதிரே தன் வயதுப் பெண், சரியான காலத்தில் திருமணமாகி அண்ணனுடன் வசிப்பதைப் பார்க்கும் போது, ஏதேனும் தோன்றாமலா இருக்கும்?

**மா**ர்க்கெட் பஸ் ஸ்டாண்டில் எப்போதும் கூட்டம். கூட்டம் குறைந்த பஸ்ஸுக்குக் காத்திருப்பதில் அலுப்பே வந்து விடும்.

இனிமேலும் தாமதிப்பதில் அர்த்தமில்லை என்று கிடைத்த பஸ்ஸில் தொற்றிக் கொண்டான்.

கைப்பை கனக்க ஆரம்பித்தது. நெரிசலில் மூச்சு முட்டியது. வியர்வையில் கசகசக்க, மனசுக்குள் பொறுமை மெல்ல இடம் பெயர்ந்தது.

அப்போதுதான் அவளைக் கவனித்தான்.

அவன் இருக்கும் பகுதியிலேயே அவளும் குடியிருக்கிறாள். பெயர் கூட அகல்யாவோ என்னவோ...

ஆரம்பத்தில் பானுவைச் சீண்ட இவளைத்தான் உபயோகிப்பான்.

'அழகுன்னா... ரெண்டாவது வீட்டுல இருக்காளே...: அவதான். ஒரு குறை கண்டு பிடிக்க முடியாது.'

'அப்ப அவளையே பண்ணிக்க வேண்டியதுதானே...'

'ஹூம்... வேற ஜாதி. அதுவும் இல்லாமே ஏற்கெனவே கல்யாணம் ஆயிருச்சு. அப்புறம்தானே இங்கே குடி வந்தா. என் அதிர்ஷ்டம்....!'

பானுவின் கோப விலகலைப் பிறகு வார்த்தைகளால் சமாதானம் செய்வான்.

'சீச்சீ... ஒரு விளையாட்டுக்குச் சொன்னா... அவளைத் தூரத்திலேர்ந்து பார்த்தாத்தான் அழகு. கிட்டப் போனா... மூஞ்சி 'ரப்'பா இருக்கும்..' என்பான்.

அருகில் அப்படி இல்லை. மிருதுவாகத் தானிருந்தது அருகில் பார்க்க. மெல்ல நகர்ந்து அவளருகில் போய் நின்றான் தன்னிச்சையாக. இவனைக் கவனித்து விட்டாள். கைச் சுமையையும் பார்த்தாள்.

''கொடுங்க...'' என்பது போல் பாவனை காட்டினாள்.

கொடுத்தான் சந்தோஷமாக. உறுத்திய விரல்களை நீட்டி மடக்கினான். விசிலடிக்கத் தோன்றியது. தன்னிடம் கூட ஏதோ கவர்ச்சி இருப்பதாக உணர்ந்தான். பிரயாணம் முழுவதும் ஏதேதோ கற்பனைகள்.

**ஸ்**டாப்பில் இறங்கியதும் பையை வாங்கிக் கொண்டான். இவன் 'தேங்க்ஸை'க் காதில் வாங்காமல் புன்சிரிப்புடன் வேகமாக நகர்ந்தாள்.

பின்பற்றினால் துரத்துகிற மாதிரி இருக்கப் போகிறது என்ற நினைவுடன் மெல்லவே நடந்தான். மனத்தின் கிளுகிளுப்பைச் சட்டென்று தோன்றிய அந்த எண்ணம் தடை செய்தது.

'மணமாகி விட்ட தனக்கே, அந்நியக் கவர்ச்சி ஈர்க்கிறது என்றால்... பருவ வயதில் உள்ள சுகன்யாவுக்கு...'

சுகன்யாவைப் பற்றி வீட்டில் பிரச்னையைக் கிளப்பி ரகளை செய்ய வேண்டும் என்ற தன் தீர்மானத்தை மனத்திலிருந்து துரத்தினான் அவசரமாக.

'விசாரிக்கலாம், அமைதியாக... நல்ல இடம் என்றால் கஷ்டப்பட்டாவது முடித்து வைக்கலாம்...'

இப்போது அவன் நடையில் நிதானம் இருந்தது.

7

# சுகபோகத் தீவுகள்

## பிரபஞ்சன்

மூர்த்தியை மாமா பாராட்டினார். போன் மூலம்தான்.

''பாராட்டும்படியாக நான் ஒன்றும் செய்திடலையே, மாமா. கூடலரசன்தான் பாராட்டுக்குரியவர். எனக்கு மிகவும் உதவிகரமாய் இருந்தார்'' என்றான் மூர்த்தி.

அதோடு மற்றொரு விஷயத்தையும் சொன்னார்.

''கோகிலா விமானத்தில் புறப்பட்டு விட்டாள். மாலை நான்கு மணிக்கு அவள் அங்கு இருப்பாள்.''

''எதற்கு மாமா கோகிலா? ஏதாவது சிக்கல் என்றால்தானே அந்த அம்மாள் இங்கு வருவதாக இருந்தது?''

''நோய் வந்த பிறகுதான் மருந்தா? நோயே வராமல் பார்த்துக் கொள்ள வேண்டாமா? இரண்டு பேரும் அவள் எண்ணப்படி சாவகாசமாகப் புறப்பட்டு வாருங்கள். உன்னைப் பார்க்க முதல்வர் கூட ஆசைப்பட்டார்.''

''முதல்வரா? என்னையா?''

''ஆம். விவரம் போனில் வேண்டாம். கோகிலா நேரில் சொல்வாள். முடித்துக் கொள்கிறேன்.''

''மூர்த்தி உடம்பு முழுக்க மின்சாரம் ஏறி இறங்குவது மாதிரி இருந்தது.

''நீங்கள் ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள் சரியாக நான்கு மணிக்கு வருகிறேன்



அம்மையார் சரியாக நான்கு மணிக்கு வந்து விடுவார்'' என்று கூடலரசன், உணவு மேஜையைக் காட்டி, ''சாப்பாடு தயார். சூடாகப் போட்டுச் சாப்பிடுங்கள்'' என்றவர், அவனைப் பார்த்து, ''உங்களைச் சரியாகக் கவனித்துக் கொள்ளும்படி அய்யா உத்தரவு போட்டிருக்கிறார். ஏதோ என்னால் ஆனதைச் செய்தேன்'' என்றவாறே புறப்பட்டுப் போனார்.

அவன் சாப்பிடத் தொடங்கினான்.

அ வ னு க் கு ப் பலப்பல யோசனைகள் வந்து போயின. மக்களைச் சாதியும் மதமும் பிரித்தது போதாதென்று இப்போது அரசியலும் புதுவகைச் சாதியாகத் தோன்றியிருக்கிறதோ என்று எண்ணம் இட்டான் அவன். பத்திரங்களில் கையெழுத்துப் போட்டு முடித்த மாரிசாமி சொன்னது அவன் நினைவுக்கு வந்தது — ''தம்பி. நிலத்தைக் கடன் தொல்லை தாங்காமல்தான் விற்கிறேன். ஆனாலும், எவரிடம் வேண்டுமானாலும் விற்று விடுகிறவன் இல்லை நான். நம் சாதி சனத்துக்கு மட்டும் தான் விற்பது என்றிருந்தேன். என் ஆசை நிறைவேறி விட்டது.'

இது என்ன வகைக் கொள்கை. விற்பது என்று வந்த பின் யாரிடம் விற்றால் என்ன? விநோதினி ஒரு முறை சொன்னது அவன் நினைவுக்கு வந்தது. 'இந்தப் பகுதியில்தான் அந்தப் புரட்சிகர டைரக்டர் இருக்கிறார். அவர் படங்களில் ஜாதி ஒழிப்பு, சீர்திருத்தம் எல்லாம் இருக்கும். அவர் சுமார் எட்டு வீடுகளைக் கட்டி வாடகைக்கு விட்டிருக்கிறார். எட்டிலும் தன் ஜாதிக்காரர்களை மட்டுமல்ல தன் கோத்திரக்காரர்களை மட்டும்தான் வைத்திருக்கிறார்.'

விநோதினியே கடைசியாகச் சொன்னது அவனுக்குச் சரியென்றிருந்தது.

'நம் இரத்தத்தோடேயே, மனிதரை விட்டு மனிதரைப் பிரிக்கும் நஞ்சு கலந்து விட்டது. நாம் சட்டைகளை மட்டும்தான் அடிக்கடி மாற்றிக் கொள்கிறோம். உடம்பைக் கழுவிக் கொள்கிறோம். கெட்டுப் போன ரத்தத்தை எப்போது சுத்தம் பண்ணப் போகிறோம்?'



**வெ**ளியே வெயில் காய்ந்து கொண்டிருந்தது. ஜன்னல் திரைகளை எல்லாம் இறக்கிவிட்டு, கூடுமான அளவில் இருளை ஏற்படுத்திக் கொண்டு உறங்க முயன்று கொண்டிருந்தான் மூர்த்தி...

ஓர் அழகிய நந்தவனம். பொன்மயமான மணல் பரப்பு. தென்னைகள் அடர்ந்த ஒரு தோப்பில் ஓர் இளைஞனும் ஒரு யுவதியும் கைகோத்தபடி நடந்து செல்கிறார்கள். சிரமப்பட்டு மூர்த்தி அந்த இருவரின் முகத்தையும் பார்க்கிறான். அந்த இளைஞன் மூர்த்தியையே பிரதி எடுத்த இன்னுமொரு மூர்த்தி. அந்த யுவதி அச்சு அசலாய் விநோதினி. இருவரும் மண்ணில் நடந்தார்கள். எனினும் மண், பஞ்சு மெத்தையே போல் குழைந்திருந்தது. கைக் கெட்டும் தூரத்தில் இருக்கும் நிலவைத் தட்டிக் கொண்டு அவர்கள் நடந்தார்கள். தட்டலில் நிலவு உடைந்து, நட்சத்திர மிட்டாய்களைச் சிந்தின. மேகம், ஒரு ரதமாக, அவர்கள் அதில் பயணம் செய்தார்கள். தழுவிய கைகளை, எந்தச் சக்தியும் பிரிக்க முடியாது என்று அவர்கள் தீர்மானித்திருந்தார்கள். அவர்கள் எண்ணத்தைச் சிதறடிப்பது மாதிரி. அவர்களை வழிமறித்துக் கொண்டு ஒரு பூதம் நின்றிருந்தது. பனைக்கும் உயரமான பூதம். கோரைப் பல்லும், சவுக்கு மர இலைகளைப் போன்ற முடிகளும், விரல் அளவு நீண்ட நகமுமாய் இருந்தது அந்தப் பூதம். அதன் உடல் முழுதும் அரசியல் கட்சிக் கொடிகளைப் போல் பற்பல வண்ணங்களில் கொடிகள் நட்டு வைக்கப்பட்டுப் பறந்து கொண்டிருந்தன. அந்தப் பூதத்தைக் கண்டு அஞ்சி நிற்கிறார்கள் அவர்கள். கண் இமைக்கும் நேரத்தில், அந்தப் பூதம் அந்தப் பெண்ணைத் தூக்கிக் கொண்டு செல்கிறது. போகும் பூதத்தின் முதுகுப் புறத்தைப் பார்த்தபடி அச்சத்தால் உறைந்து போய் நின்றிருக்கிறான் அவன். முதுகுப்

புறம் அசப்பில் அவன் மாமாவினது போலவே தோன்றுகிறது...

திடுக்கிட்டு விழித்துக் கொண்டான் மூர்த்தி.

கதவு தட்டப்படும் ஓசை கேட்டபடியே இருக்கிறது. கதவைத் திறந்தான். வெளியே கோகிலாவும், கூடலரசனும் நின்றிருந்தார்கள்.

கூடலரசன் சொன்னார்.

''நாலு மணிக்கே வந்து விட்டேன், மூர்த்தி. நீங்கள் நன்கு உறங்கிக் கொண்டிருந்தீர்கள். தொந்தரவு படுத்த வேண்டாம் என்று போய் விட்டேன். அம்மாளையும் அழைத்துக் கொண்டு வந்து விட்டேன். சரி, நீங்கள் பேசிக் கொண்டிருங்கள். நான் போய் இன்னும் ஒரு மணி நேரம் சென்று திரும்புகிறேன்'' என்றபடி புறப்பட்டுப் போனார்.

கோகிலா பயணக் களைப்பு தெரியாமல் இருந்தாள். நெற்றியில் வந்து விழுந்த முன் மயிர் மட்டுமே, 'அவள் பயணம் செய்து வந்தவள் என்பதை உணர்த்திற்று.

''ஹலோ....'' என்றபடி கட்டிலில் சாய்ந்த படி அமர்ந்தாள் கோகிலா. ''வெற்றி மேல் வெற்றி என்பார்களே, அது மாதிரி எடுத்த காரியத்தில் வெற்றி பெற்றிருக்கிறீர்கள். உங்கள் மாமாவுக்கு மட்டுமல்ல, முதலமைச்சருக்கும் உங்கள் மேல் கவனம் விழுந்திருக்கிறது...'' என்றபடி அவனைப் பார்த்துச் சிரித்தாள் கோகிலா. அவளுக்கு வயது முப்பத்தெட்டு என்று ஒரு பேச்சின் போது மாமா சொன்னது அவன் நினைவுக்கு வந்தது. வயது சிலருக்கு எவ்வளவு வசீகரத்தை ஏற்படுத்தி விடுகிறது? காய், பழமாவது போல சில பெண்களுக்கு, முதுமையின் முதல் ரேகை எட்டித் தொடும் இந்த நாற்பதுகளை ஒட்டிய வயதிலும் எவ்வளவு வசீகரத்தை ஏற்படுத்தி விடுகிறது. கோகிலா அந்த அளவு வசீகரமாக இருந்தாள்!

கூந்தலைப் பிரித்தபடி அவள், ஜன்னல் வழி வானத்தைப் பார்த்தபடி சொன்னாள்.

''முதல்வர் கவனம் உங்கள் மேல் விழுந்தது. உங்களுக்கு நல்லது. உங்களுக்கு மட்டும் தான். உங்கள் மாமாவுக்கு இல்லை.''

மூர்த்தி திடுக்கிட்டான்.

''என்ன சொல்கிறீர்கள்?''

''உங்களுக்கே போகப் போகத் தெரியும்.''

அவன் அவளைப் பார்த்தபடி, மேஜையை ஒட்டிய நாற்காலியில் அமர்ந்திருந்தான்.

''மூர்த்தி. நீங்கள் வாங்கிய நிலம் போதாது. இன்னும் கொஞ்சம் கூடுதலாகத் தேவை. உங்கள் மாமா, உங்கள் பெயரில் நிலம் வாங்கியிருப்பதாக யாரோ ஒரு மொட்டைக் கடிதம் மத்திய அரசுக்கு எழுதியிருக்கிறார்கள். எங்கிருந்து எதிர்ப்பு வரும் என்பதை நம்மால் யூகிக்க முடியும். இந்தப் பகுதியில் தளைய சிங்கம் என்கிற ஓர் அரசியல்வாதி இருக்கிறார், அல்லவா. அவரை நான் சந்திக்க இருக்கிறேன். அவரைப் பார்க்கத் தான் கூடலரசன் போய் இருக்கிறார். ஆசாமி ரொம்ப நேர்மையானவர் என்று கூடல் சொல்கிறார். நேர்மைக்கும் ஓர் எல்லை இருக்குதானே? அது என்ன என்பதை நாம் இன்று பார்க்கப் போகிறோம். சரி, புது இடம். புது மனிதர்கள், புதுக் காரியங்கள். இதெல்லாம் உங்களுக்குப் பிடித்திருக்கிறதா?''

மூர்த்தி யோசித்து விட்டுச் சொன்னான்.

''தெரியவில்லை, கோகிலா. சமயங்களில் நாம் ஏதோ நல்லது செய்வதாகத் தோன்றுகிறது. ஆனால், விநோதினியிடம் பேசுகிற போது, தப்புச் செய்து கொண்டிருப்பதாகப் படுகிறது...''

கோகிலா அவனைப் பார்த்து அழகாகச் சிரித்தாள். சிரிப்புக்கும், மகிழ்ச்சிக்கும் எப்போதும் வயது ஏறுவதில்லை என்று அந்தக் கணத்தில் தோன்றியது அவனுக்கு.

''விநோ, ஒரு லட்சியவாதி. அப்படி லட்சியம் ஏற்றிருப்பவர்கள், எப்போதும் மண்ணை, தங்கள் இருப்பை, தங்கள் சுகத்தை, நலத்தை நினைப்பதில்லை. அவர்கள் கனவுகளில் வாழ்பவர்கள். யதார்த்தம் அவர்களுக்கு எப்போதும் துன்பத்தைத் தருவதாய் இருக்கும். வேங்கையும், மானும் ஒரு குளத்தில் நீர் அருந்த வேண்டும் என்று அவர்கள் எதிர்பார்ப்பார்கள். சாத்தியமா அது? ஏன், விநோ ஒரு லட்சியத்தைச் சீராட்ட நான்தான் செலவு பண்ண வேண்டியிருக்கிறது. ஐந்து நட்சத்திர ஓட்டலில் அமர்ந்து, ஷேக்ஸ்பியரா படித்தபடி, அவள் சாப்பிடும் ஒரு கப் பானத்தின் விலை அறுபத்து எட்டு ரூபாய்! ஒயினும், காப்பியும் சேர்ந்து தயாராகும் பானம் அது. அதன் பெயர்கூட எனக்கு நினைவில் இல்லை. மாதம் ஒன்றுக்கு ஐயாயிரத்துக்கும் மேலே புத்தகத்துக்காகச் செலவு செய்கிறாள். ஏ.சி. இல்லாமல் அவளால் தூங்க முடியாது. எப்போதும் தன் பையில் ஆயிரத்துக்கும் குறையாத பணம் இருக்க வேண்டும் அவளுக்கு. அப்படி அவள் இருக்கலாம். ஏனென்றால், அவள் கோகிலாவின் மகள். நான் ஒரு நாடக நடிகையின் மகள். உங்களுக்குத் தெரியுமா, மூர்த்தி. நான் அப்படி இருக்க முடியாது. ஒரு சல்லிக் காசின் மதிப்பும் எனக்குத் தெரியும். கரன்சிகளின் மதிப்பு, மனிதர்களின் மதிப்பை விட உயர்ந்தது என்பதை நான் அறிவேன். அவள் கருத்துப்படி அசிங்கமான, மக்கள் விரோத அரசியலில்தான் எனக்குப் பணம் கிடைக்கிறது. கறுப்புப் பணம், கறுப்புப் பணம் என்கிறார்களே, கறுப்பில்தானே அரசாங்கமே நடக்கிறது. கறுப்புப் பணம்தானே பேரணியாகி, தேர்தல் செலவுகளாகி, சட்டமன்ற உறுப்பினர்களாகி, அமைச்சர்களாகவும் ஆகியிருக்கிறது? வெறும் பத்தாயிரம் ரூபாய் செலவு செய்து தேர்தலைச் சந்தித்து வெற்றி பெற்ற ஒரு மனிதரை எனக்கு நீங்கள் காட்டுங்கள்...

மூர்த்தி வெட்டிக் கொண்டு கேட்டான்.

நம்மைச் சுற்றிலும் அயோக்கியத்தனம் நடக்கிறது என்பதற்காக, நாமும்

அப்படி...''

கோகிலா கை அசைத்துக் கொண்டே எழுந்தாள்.

''பொறு இளைஞனே... நான் குளிக்கும் நேரம் வந்து விட்டது. ஓர் அரைமணி பொறு'' என்றவள் தன் பெட்டியைத்திறந்து டவலையும், பிரஷ்ஷையும் பேஸ்ட்டையும் எடுத்தாள்.

''நான் வெளியே இருக்கிறேனே...'' என்றபடி எழப் போனான் மூர்த்தி.

''தேவையில்லை. சும்மா இருங்கள்'' என்றபடி குளியல் அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனாள் கோகிலா.

மிகச் சிறப்பாக ஆடை அணிந்திருந்தாள் கோகிலா. ஆடை அணிதல் என்பது அழகை அணிதல் என்பார் தமிழ் ஆசிரியர். எல்லோரும் உடுத்தும் சேலை. அணியும் ரவிக்கை. அவளுக்குத் தனி அழகையும் சோபையையும் அளித்தது. அனைத்துக்கும் ரஸனை வேண்டும் என்பது எவ்வளவு அரிய கண்டுபிடிப்பு..

சிவப்புப் புடைவையும், சிவப்பும் மஞ்சளும் கறுப்புமாகக் கலந்து ரவிக்கையும் அணிந்திருந்தாள் அவள். சந்தன மணம் கமழ, கூந்தலைச் சீவிச் சிக்கெடுத்துக் கொண்டே அவள் சொன்னாள்.

''மூர்த்தி உங்களுக்குத் தெரியுமா? நான் சிறையில் பிறந்தவள். என் அம்மாதான் பார்வதி. அந்தக் காலத்து நாடகப் பிரியர்கள் அனைவரும் அவளை அறிவார்கள். சுதந்திரப் போராட்டம் தீவிரமடைந்திருந்த காலத்தில், மேடையில், 'கொக்கு பறக்குதடி பாப்பா. வெள்ளைக் கொக்கு பறக்குதடி பாப்பா.. இந்த நாட்டுச் சொந்த மக்களைச் சுரண்டிக் கொழுக்க வந்த வெள்ளைக் கொக்கு பறக்குதடி பாப்பா!' என்று பாடியதற்காகக் கைது செய்யப்பட்டுக் கோவை சிறையில் அடைக்கப்பட்டவர். கைதாகும் போதே கர்ப்பிணியாக இருந்தார். சிறையில் நான் பிறந்தேன். சுந்தராம்பாள் தான் எனக்குப் பெயர் வைத்தவர். சிறையை விட்டு அம்மா என்னைச் சுமந்து கொண்டு வெளியே வந்த போது, ஓர் ஆத்மா அவரை வரவேற்க வரவில்லை. என் அப்பா, அம்மா சிறைக்குப் போன மறு மாதமே வேறு ஒருத்தியோடு வாழத் தொடங்கி விட்டார். அம்மா தன்னையும் என்னையும் வளர்க்கப் பட்ட பாடு எனக்குத் தெரியும். நாடகம் நசிந்து சினிமா செழித்த காலம் அது. அம்மா இரண்டு மூன்று பேர்களோடு இருந்து என்னை வளர்த்தார். நான் நடிகை ஆனேன். கௌரவமான குடும்பத்துப் பெண்கள் சினிமாவுக்கு வரத் தயங்கியதால் எனக்கு அந்த வாய்ப்புக் கிடைத்தது என்று வைத்துக் கொள்ளுங்களேன். சினிமா மட்டும் என்ன? அங்கும் மனிதர்கள்தானே இருக்கிறார்கள். என்னைச் சுலபமாகப் பெற்றுக் கொள்ள முடியும் என்ற நினைவிலேயே குழந்தை முதல் கிழவர் வரை இருந்தார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். அவர்கள் தொந்தரவு சகிக்க முடியாமல்தான், நான் முதல்வரை நாடிப் போனேன். ஆம், நானாகத்தான் போனேன். நான் அவருடன் சிநேகமாக இருக்கிறேன் என்று தெரிந்ததுமே, என்னைச் சுற்றி வந்தவர்கள், விலகத் தொடங்கினார்கள்.. அப்படித்தான். நான் இந்தச் சூழலில் கொண்டு வரப்பட்டேன்.''



''இங்கே நூறு ஏக்கர் நெல், பக்கத்தில் ஐம்பது ஏக்கர் கரும்பு, இந்தப் பக்கம் எழுபது ஏக்கர் வாழை பயிரிடப் போறாங்களாம்!''

''எப்போ?''

''தேர்தல்லே நீங்க கொண்டு வர்றதா வாக்களித்த ஆற்று நீர் வந்ததும்!''

அவள் அவனைப் பார்த்து மீண்டும் சிரித்தாள். அவன் மனசுக்குள் அவளைப் பற்றிய இரக்கமே சுரந்தது.

''இப்படி வாழ நேர்ந்தது விட்டமைக்காக நீங்கள் வருந்துகிறீர்களா கோகிலா?''

அவள் யோசித்து விட்டுச் சொன்னாள்.

''இல்லை... எனக்கு எப்போதுமே, நான், வாழ்க்கையை நடத்திக் கொண்டு செல்வதாகத் தோன்றுவதில்லை. மாறாக, வாழ்க்கைதான் என்னை வழிநடத்திச் செல்வதாகத் தோன்றும். அப்படித்தான் நடக்கிறது. அது எனக்கு என்ன தருகிறதோ அதைப் பெற்று அமைதி அடைவது மட்டுமே என் செய்கை. நான் வருத்தப்படவும் இல்லை. சந்தோஷப்படவும் இல்லை.''

கதவைத் தட்டி விட்டுக் கூடலரசனும், மற்றும் ஒரு மனிதரும் அறைக்குள் நுழைந்தார்கள். அந்த மனிதர் தளையசிங்கம்தான்.

''வணக்கம்'' என்று எழுந்து நின்று கரம் குவித்து வணங்கினாள், கோகிலா. அந்த வணக்கத்தில், பணிவு, அன்பு, இது உனக்கு மட்டுமே ஆன தனி அங்கீகாரம் என்பது போன்ற பல பொருள்களும் அடங்கிக் கிடந்தன. வந்தவர் மிரண்டு போன மாதிரி இருந்தார்.

''கூடலரசன்... உங்கள் ஊர்க் கோயில் பிரசித்தி பெற்றதாயிற்றே! மூர்த்தியை அழைத்துப் போய்க் காட்டுங்களேன்.''

குறிப்பை அறிந்து இருவரும் வெளியேறினார்கள்.

(தொடரும்)

# கல்கி 1989 தொழில் மலர்

இந்தியத் தொழில் துறையின் முதுகெலும்பு போன்ற விவசாயத்தின் பல்வேறு பிரிவுகளைப் பற்றிய அதிசயமான, அதி ரசமான தகவல்கள்.



வண்ணப்படம்: யோகா.

* **வனவளம்**

  மரங்களைப் பாதுகாக்க சிப்கோ இயக்கம் நடத்திய சுந்தர்லால் பகுகுணாவின் கட்டுரை முதல் ஜவ்வாது மலையில் சந்தன மரங்கள் வளர்ச்சி சந்தன எண்ணெய்த் தயாரிப்பு வரை பல்வேறு விஷயங்கள்.

* **ரஸாயன உரங்கள்; பூச்சி கொல்லிகள்**

  ரசாயன உரத் தயாரிப்பு ஆலைக்கு நேரடி விசிட் முதல் பூச்சி கொல்லி மருந்துகள் அதிகம் பயன்படுத்துவதால் மனித ஆரோக்கியத்துக்கு ஏற்படும் பாதிப்பு வரை ஓர் அலசல்.

* **மலைத் தோட்டங்கள்; பழத் தோட்டங்கள்**

  பணத்தை அள்ளித் தரும் பழத் தோட்டங்கள் முதல் தலைவர்களுக்கு மாலை அணிவிக்க உதவும் ரோஜா தோட்டங்கள் வரை! மலைத் தோட்டங்கள், கரும்புத் தோட்டங்கள் முதலியன.

* **விவசாயத் தொடர்பான பொறியியல் துறை**

  பலரக பம்ப் செட்கள் தயாரிப்பு, டிராக்டர்கள் தயாரிப்பு பற்றிய படப்பிடிப்பு தவிர, விவசாயம் இயந்திரமயமாவதால் வேலை வாய்ப்புக்கள் பாதிக்கப்படுமா என்பது பற்றிய ஒரு காரசார விவாதம்!

* **விளைச்சலைப் பயன்படுத்தும் தொழில்கள்**

  கோகோ பயிரிலிருந்து சாக்கலேட், கரும்புச் சக்கையிலிருந்து காகிதம், யூகலிப்டஸ் மரப்பட்டையிலிருந்து ரேயான் இழை.. இன்னும் என்னென்னவோ வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்களின் உற்பத்தி விவசாயத்தையல்லவா நம்பியிருக்கின்றது! சர்க்கரை ஆலை முதல் ரொட்டி — பிஸ்கட் தொழிலகங்கள் வரை ஒரு சுற்றுலா!

* **விவசாயத் தொழில் நுணுக்கம், நிதி உதவி, விநியோகம், விற்பனை.**

  வீரிய விதை என்றால் என்ன? மாடுகளை இன்ஷ்யூர் செய்வது எப்படி? காவிரியில் கிடைக்கும் குறைந்தபட்ச நீரைக் கொண்டு அதிகபட்ச விளைச்சல் காண்பது எவ்வாறு? லோன்மேளாவினால் யாருக்குப் பயன்? — நூற்றுக்கணக்கான கேள்விகளுக்குப் பதில்களை உள்ளடக்கிய பகுதி.

* **கால்நடைகளும் கோழிப் பண்ணைகளும்**

  வெண்மைப் புரட்சி எந்த அளவுக்கு வெற்றி? முட்டைக் கோழிக்கும் பிரியாணி கோழிக்கும் என்ன வேறுபாடு? கால்நடை மற்றும் கோழித் தீவனத் தயாரிப்பிலும் விற்பனையிலும் சாதனை புரிய முடியுமா?

* **கிராமம் மற்றும் குடிசைத் தொழில்கள்**

  சட்டி பானைகள் தயாரிப்பிலிருந்து, காந்தி ஆசிரமத்தில் உருவாகும் ஊதுபத்தி, சோப்பு வரை அரும்பணியாற்றும் குடிசைத் தொழில்களின் வரிசை. கைவினைஞர்களின் கலைப் பொருட்கள் கண்காட்சி.

**256 பக்கங்கள்: விலை ரூ. 10**

உடனே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள். அல்லது தபாலில் பெற கல்கி காரியாலயத்துக்கு எழுதுங்கள். பதிவுத் தபாலில் பெற ரூ. 6 சேர்த்து அனுப்ப வேண்டும்.

மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை 600 032.

# அடுத்த தலைமுறை

சத்தியப்பிரியன்

**அ**ம்மா தூக்க முடியாமல் இரண்டு கூடை, ஒரு பை இத்தனையையும் தூக்கிக் கொண்டு உள்ளே வந்தாள். முகத்தில் களை இல்லை. அசதி என்று சுலபமாகத் தப்பித்துக் கொண்டு விடுவாள். 'என்னிக்குக் கூட்டமில்லாமல் பஸ் வந்திருக்கு, சொல்லு?' என்பாள். ஆனால் இந்த அலுப்பு அசதி சம்பந்தப்பட்டதில்லை.

''ஏதாவது சொல்லிக் காட்டினாளா அங்கே?'' ரசம்விட்டுப் பிசைந்து கொண்டே விஜி கேட்டாள்.

''எங்கே?'' அம்மா ஒன்றும் தெரியாதவளானாள்.

''விக்ரம் வீட்டில்....''

''இல்லியே.... எதுக்குக் கேக்கறே?''

''மூஞ்சி வாடினாப்பல இருக்கேன்னு கேட்டேன்!''

''மன்னி, தானும் ஆசையா விஜிக்குன்னு ரெண்டு புடைவை எடுத்தேன்னு கொடுத்து விட்டா. மாட்டேன்னு சொல்ல முடியுமா? பண்டிகை நாளா இருக்க பஸ்ஸில் ஏக கூட்டம். ஏறின ஸ்டாப்பிலிருந்து இறங்கற வரையில் நின்னுண்டு வரேன்.''

''உன் அலுப்பு உடல் சம்பந்தப் பட்டதா தெரியலைம்மா...''

''சாப்டேன்னு பேர் பண்ணாதே விஜி. நாளைக்கு விக்ரம் வீட்டுக்குப் போகப் போறவ நீ. உங்கம்மா இவ்ளோதான் சாதம் போட்டுவளர்த்தாளான்னுமன்னிஎன்னைத் தான் வைவா'' — அம்மா பேச்சை மாற்றினாள்.

''என்ன நடந்தது?'' விஜி விடாமல் கிளறினாள்.

அம்மா பதில் சொல்லாமல் புடைவைப் பெட்டிகளைக் கீழே பரப்பினாள். உடல் முழுவதும் ஜரிகை ஓட இரண்டு புடைவைகளும் அந்தஸ்து காத்தன. அம்மாவின் முக மாறுதலின் காரணம் புரிந்தது.

''மன்னியோட ஸெலக்ஷனா இதெல்லாம்?''

''இல்லை. தாரிணி வந்திருக்கா.''

''தாரிணியா?''

''மன்னியோட அண்ணா பொண்ணுடி.''

''லிபியாவில் எங்கேயோ இருக்காளே அவளா?''

''அவதான். விக்ரம் கல்யாணத்துக்குத் தான்தான் புடைவை ஸெலக்ட் பண்ணுவேன்னு வரிஞ்சு கட்டிண்டிருக்கா.''

''சகிக்கலைன்னு திருப்பி அனுப்பிச்சிடு.''

''பைத்தியம் மாதிரி உளறாதே.''

''நீ எடுத்துண்டு போன புடைவைகளைக் காட்டினியோ?''

லலிதா காட்டவில்லை. நாலு பக்கத்திலிருந்தும், குத்தலும், இடக்குப் பேச்சும் பந்தல் போடப்படும்.

'கல்யாணத்தன்னிக்குப் பத்துப் பாத்திரம் தேய்க்கிறவனுக்குக் கூட உங்க புடைவை விலையை விட சம்பளம் கூடுதல் இருக்கும்!' — சிரித்துச் சிரித்து மன்னி ஊசி இறக்குவாள்.

**ஆ**ளைத் தூக்கி அடிப்பது மாதிரி மன்னியின் பேச்சும், சிரிப்பும் இருக்கும். ஏழெட்டு வருஷங்களாக லலிதாவுக்கும், அவள் அண்ணனுக்கும் சுத்தமாக நின்று போன உறவைப் புதுப்பிக்க விக்ரம் வந்து வாசலில் நின்றான்.

'நான் விஜியை நேசிக்கறேன் அத்தை!'

'அதுக்கு அர்த்தம்?'

'அவளைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்.'

'என்னிக்கு விஜியோட அப்பா செத்துப் போனாரோ அன்னைலேர்ந்து உங்க வீட்டு மனுஷாளுக்கு எங்க வீட்டுக்குக் கிழக்கு எது, மேற்கு எதுன்னு மறந்து போச்சு விக்ரம்.'

'எனக்கு இப்போ தெரிஞ்சிருக்கு அத்தை.'

'விஜிக்கு இது தெரியுமா?'

'அவளும் என்னை நேசிக்கிறா.'

'வேணாம் விக்ரம். அவ ஏதோ தனக்குத் தெரிஞ்ச மட்டில் ஒரு பாங்க் வேலை தேடிண்டிருக்கா. உங்க அமைப்பு வேற, அந்தஸ்து வேற. நான் ஒரு ஏழை மச்சரா; ரெண்டு பொண்ணையும் மிஞ்சிப் போனா பாங்க்ல வேலை பாக்கறவங்க கையில் பிடிச்சுக் கொடுத்தாப் போதும்னு இருக்கேன். உன் சூழல், உன் படிப்பு இதெல்லாம் எங்களுக்கு ஒத்து வராது. நல்லது, கெட்டது ரெண்டுமே உங்களுக்குத் தனி எங்களுக்குத் தனின்னு ஆயிடுத்து.'

விக்ரம் விடவில்லை. பிடிவாதமாக நின்றான். காதல், அந்தஸ்து பேதம் அறியாது என்றான். மன்னி ஆரம்பத்தில் ஆடினாள். அந்தஸ்து பேதம் பார்த்தாள். நாலுநடை வீட்டுக்கு வந்து விட்டுப் போனாள். சுற்றி வளைத்து, இஷ்டமில்லை; விட்டுடச் சொல்லு உன் பெண்ணிடம் என்றாள்.

'அவ வேத்து ஜாதியில்லை. அந்நியமும் இல்லை. ரிஜிஸ்தர் ஆபிஸ்ல போய்க் கல்யாணம் பண்ணிண்டா கேவலம் உனக்குத்

தான். எது நல்லதுன்னு யோசிச்சுக்கோ' என்று விக்ரம் தீர்மானமாக மன்னியிடம் சொல்லி விட்டான்.

மன்னி சட்டென்று கட்சி மாறி விட்டாள். எதிர்ப்பலம் அறிந்து விக்ரம் விட்ட அம்பில் மன்னி சாய்ந்து விட்டாள். வேதனையும், வலியும் லலிதா மேல் திரும்பியது.

'கல்யாணத்துக்கு நான் ஒத்துக்கறேன் லலிதா. நான் சொல்லப் போறது அவனுக்கோ, விஜிக்கோ தெரியக்கூடாது. இப்படி ஒண்ணுமில்லாத வாளோட சம்பந்தம் வெச்சுக்க நான் விக்ரமை ஆளாக்கலை. விக்ரமின் ஸ்டேட்டஸ் உனக்குத் தெரியும்னு நினைக்கிறேன். அவன் கம்பெனியில் டாப் எக்ஸிக்யூட்டிவ் கேடருக்கு ஒரு படி கம்மி. ஸ்டேட் லெவல்ல டென்னிஸுக்கு ரெப்ரஸண்ட் பண்றான். உங்கண்ணா மெட்ராஸில் லீடிங் லாயர். என்னால இவ்ளோதான் முடியும்னு கல்யாணம் பண்ணித் தராதே. உன்னால எவ்ளோ முடியுமோ செய். மீதியை நான் பார்த்துக்கறேன். ஆனா சிறிசுகளுக்கு இது தெரிய வேண்டாம்.'

'ஏன் சந்தோஷம், துக்கம் எல்லாத்திலையும் விஜி கூடவே இருக்கா மன்னி. அவளுக்குத் தெரியாம என்னால ஒரு காரியம் கூடச் செய்ய முடியாது.'

'விஜிக்குத் தெரியட்டும். விக்ரம்க்குத் தெரிய வேண்டாம். சரி எவ்ளோ சேர்த்து வெச்சிருக்கே?'

'பத்து வருஷமாச்சு மன்னி அவர் போய். அவர் இருந்தப்பவே எனக்குக் கைக்கும் வாய்க்கும்போராட்டம்தான். அவர் போனப்பறம் தேடிண்ட மச்சர் வேலை இது. என்னால எவ்ளோ சேர்த்து வெச்சிக்க முடியும்?'

'அப்புறம் எப்படி ஒரு கம்ப்யூட்டர் எஞ்ஜினியரை மாப்பிள்ளையாக்கிக்க ஆசைப்படறே?'

'நான் ஆசைப்படலை.'

'ஆராயக் கிளம்ப வேண்டாம். கல்யாணம் கொஞ்சம் பெரிய சத்திரத்தில நடக்கணும். ஜானவாசம் வேண்டாம்னு விக்ரம் சொன்னாலும் முதல்நாள் நிச்சயதார்த்தம் உண்டு. மறுநாள் கட்டுச் சாதமும் உண்டு. இருக்கிற நகையைப் போடு. முடியற புடவையை வாங்கு. மிச்சமெல்லாம் நான் பார்த்துக்கறேன். எனக்குச் சபை கௌரவம் முக்கியம். லீடிங் லாயரோட பொண்டாட்டி நான். பையன் கல்யாணத்தில் ஏனோ தானோன்னு இருக்க முடியாது.'

அதன்பிறகு மன்னிதான் கல்யாண சத்திரம் பார்த்து அட்வான்ஸ் கொடுத்தாள். மன்னியின் இரண்டு அக்காமார்களும், அம்மாவும் கூட வந்தார்கள்.

'லலிதா! பையன் கல்யாணத்தைப் பொண்ணு கல்யாணம் மாதிரி நடத்திக் கொடுக்கும் சம்பந்தி கிடைக்க நீ ரொம்ப அதிர்ஷ்டம் பண்ணியிருக்கணும்!' — மன்னியின் அம்மா இடது பக்கம் குத்தி, வலது பக்கம் எடுப்பது மாதிரி பேச, அக்காமார்கள் ஓவென்று பெருங்குரல் எடுத்துச் சிரித்தார்கள்.

லலிதாவுக்கு முதன்முதலாக முகம் வாட ஆரம்பித்தது.

மன்னி இரண்டு பவுனில் திருமாங்கல்யம், எட்டுப்பவுனில் நாலு ஜோடி வளையல், பத்துப்பவுனில் காசுமாலை, நெளி மோதிரம் எல்லாம் வாங்கினாள். தாரிணி





# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

R.K.SWAMY/FSL/5112/TAM

நின்னா சபைல அசிங்கமாத் தெரியும்; அதனால அம்பது பத்திரிகை எடுத்துக்குங்கோ அது போதும்னுட்டா.''

கடவுளே! இது என்ன கொடுமை. விஜிக்கு உடம்பு முழுவதும் பதறியது. செருப்பை மாட்டிக் கொண்டு கிளம்பினாள்.

''எங்க விஜி கிளம்பறே?''

''சுஜாதா வீட்டுக்குப் போய் விக்ரமுக்கு ஃபோன் பண்ணப் போறேன்.''

''என்னன்னு?''

'எனக்கு இந்தக் கல்யாணத்தில் இஷ்டமில்லேன்னு.

''விஜி?''

''பின்னே என்னம்மா? ஓர் அளவுக்குத் தாம்மா பொறுத்துக்க முடியும். அவாளோட குத்தலையும், ஆங்காரத்தையும் நீ தாங்கிண்டு இந்தக் கல்யாணம் நடக்கணும்னா அது வேண்டாம்.''

''கொஞ்சம் நில்லு விஜி.''

அம்மா ஹேண்ட் பாக்கிலிருந்து இன்னொரு பொட்டலம் எடுத்தாள்.

''பிரிச்சுப் பாரு.''

விஜி பிரித்தாள். பச்சை, நீலம், சிவப்பு என்று வண்ணங்களை வாரியிறைக்கும் வைரத்தோடும், ஒரு முத்துப் புல்லாக்கும்.

''ஏது இதெல்லாம்?''

''விக்ரம் வாங்கிக் கொடுத்தது.''

''விக்ரமா?''

''பஸ் ஏத்தி விடறேன்னு கூடவே வந்தான் விஜி. அவனுடைய சொந்தச் சேமிப்பிலிருந்து மன்னிக்குத் தெரியாம இதை வாங்கியிருக்கான். 'அம்மாவோட ஜபர்தார், அந்தஸ்து வெறி எல்லாம் எனக்குத் தெரியறது. அது தப்புன்னும் தெரியறது. எனக்கு எதுவும் கிடையாது. எனக்கு நேசம் பெரிசு. மனுஷத்தனம் பெரிசு. இந்த வைரத் தோட்டையும், முத்துப் புல்லாக்கையும் நீங்க பண்ணினதுன்னு சபைல வைச்சா, அம்மாவோட வேகம் மட்டுப்படும்'னு சொல்லிக் கொடுத்தான்.''

விஜிக்கு விக்ரமின் பால் நேயம் கூடியது.

''ஆனாலும் என் ஒருத்திக்காக நீ இவ்வளவும் தாங்கிக்கணுமாம்மா?''

''இது போன தலைமுறைகளுக்கு நடுவில் உண்டான பிரச்னை விஜி. அடுத்த தலைமுறை நல்ல தலைமுறையா உருவாகிக்கிட்டு வர்றப்ப பழசுக்கு வருத்தப்பட்டுப் பிரயோஜனமில்லை. விக்ரமுக்கு அவன் அம்மாவின் சாயல், குணம் இருந்தா நீ சொல்றது சரி. பழைய தலைமுறை வளர்ந்து ஓர் அளவில் நின்னாச்சு. பாடம் சொல்லிக் கொடுத்து இனிமே மாத்த முடியாது. அடுத்த தலைமுறை மாறி நல்ல விதமா வர்றது பெரிய விஷயம். இதைக் காப்பாத்தணும். அந்தப் பொறுப்பை நீ எடுத்துக்கோ. நானும் மன்னியும் போன தலைமுறை. இது எங்க பிரச்னை. இதை எங்க கிட்ட விட்டுடு'' என்றாள் அம்மா.

அம்மாவா இவ்வளவு பேசுகிறாள்? — விஜியின் விழிகள் வியப்பில் விரிந்தன.

"அம்மாவோட காபியை விட என் காபி ரொம்ப நல்லாயிருக்கும்!"

Parry's

காஃபி பைட்

" காபின்னு இப்படித்தான் இருக்கணும்!"






பாரிஸின் தரமான தயாரிப்புகள்

காரமில்க் • சாக்லேட் எக்லேர்ஸ்
• கோகனட் கிரீம் • சாக்லேர்ஸ்
• காஃபி பைட்




HTA 7037

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 23
## ஊமையும் பேசுமோ?

அநிருத்தர் சற்று நேரம் பூங்குழலியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, அவளைக் கொண்டு வந்த தாதிமார்களை அருகில் அழைத்தார்.

அவர்களிடம் மெல்லிய குரலில் ஏதோ கேட்டார். அவர்கள் மறுமொழி சொன்ன பிறகு அந்த அறையை விட்டு அப்பால் போகச் செய்தார்.

ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, "திருமலை! ஏதோ தவறு நேர்ந்திருப்பதாகத் தோன்றுகிறது!" என்றார்.

"ஆம், ஐயா! அப்படித்தான் எனக்கும் தோன்றுகிறது!" என்றான் சீடன்.

"இவள் இளம் பெண்; சுமார் இருபது பிராயந்தான் இருக்கலாம்."

"அவ்வளவு கூட இராது."

"நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த மாதரசிக்குப் பிராயம் நாற்பது இருக்க வேண்டும்."

"அதற்கு மேலேயும் இருக்கும்."

"ஆம், ஆம்; நீ இலங்கைத் தீவில் மந்தாகினி தேவியைப் பார்த்திருக்கிறாய் அல்லவா?"

"ஆம்; ஐயா! பார்த்து, தங்கள் கட்டளைப்படி இங்கு அழைத்து வரவும் முயன்றேன். முடியவில்லை."

"இந்தப் பெண் மந்தாகினி தேவி அல்லவே?"

"இல்லை, குருதேவரே! நிச்சயமாக அந்த அம்மையார் இல்லை!"

"அப்படியானால் இவள் யாராயிருக்கும்? எப்படி இங்கு வந்து சேர்ந்தாள்?"

"இவளையே கேட்டு விட்டால் போகிறது!" என்றான் ஆழ்வார்க்கடியான்,

"ஊமையிடம் கேட்டு என்ன பயன்?"

"குருதேவரே! இவள் ஊமைதான் என்பது...."

"அதைத்தான் தாதிமார்களிடம் கேட்டேன். இங்கு வந்ததிலிருந்து இவள் ஒன்றும் பேசவில்லை என்றார்கள்."

"குருதேவரே! இவளை அடையாளங் கண்டு அழைத்து வருவதற்கு யாரை அனுப்பியிருந்தீர்கள்?"

"ஆகா! அந்த மூடன் ஏதாவது தவறு செய்து விட்டானா, என்ன?"

"எந்த மூடன், குருதேவரே! தாங்கள் இத்தகைய காரியங்களுக்கு மூடனை அனுப்பி வைத்திருப்பீர்களா?"

"புத்திசாலியாகக் காணப்பட்டான். பழையாறைக்கு நாம் சென்றிருந்த அன்று, வாணர் குலத்து வல்லவரையனுடன் ஒரு வாலிபன் சண்டையிட்டான் அல்லவா?"

"ஆம்; பழையாறை வைத்தியர் மகன் பினாகபாணி."

"அவனேதான்! உன்னையும் வல்லவரையனையும் கரிகாலரைச் சந்திக்க அனுப்பிய பிறகு, அந்த வைத்தியர் மகனைச் சிறையிலிருந்து விடுதலை செய்து அழைத்து வரப் பண்ணினேன். நம் ஒற்றர் படைக்குத் தகுந்தவன் என்று கண்டு, அவனைக் கோடிக் கரைக்கு அனுப்பினேன். முன்னம் அவன் கோடிக்கரைக்குப் போய்ப் பழக்கப்பட்டவனாம்..."

"அவன்தான் இந்தப் பெண்ணை இங்கு அழைத்து வந்தானா?"

"அடையாளம் எல்லாம் சரியாகச் சொல்லி அனுப்பினேன். அவனும் திருவையாற்றில் கொண்டு வந்து சேர்த்து விட்டுக் காரியம் வெற்றி என்று செய்தி அனுப்பியிருந்தான்..."

"ஐயா! நான் தோற்றுப் போன காரியத்தில் வெற்றி அடைந்த அந்தப் புத்திசாலி ஒற்றன் இப்போது எங்கே? இந்தப் பெண்ணைக் குறித்து அவனையே கேட்டு விடுவது நல்லதல்லவா?"

"நல்லதுதான்; ஆனால் நேற்றிரவு அவனுக்கு எதிர்பாராமல் ஒரு விபத்து நேர்ந்து விட்டது...."

"அடாடா! அவனுக்கு என்ன விபத்து, எப்படி நேர்ந்தது?"

"சிவிகையின் பின்னால் அவனும் வந்து கொண்டிருந்தான். இருட்டிய பிறகு கோட்டைக்குள் வரவேண்டும் என்று நான் கட்டளையிட்டிருந்தபடியால், அந்தப்படியே அந்தி மாலை நேரத்தில் திருவையாற்றிலிருந்து புறப்பட்டு, முன்னிரவு வேளையில் கோட்டையை நெருங்கிக் கொண்டிருந்தார்கள். திடீரென்று புயல் அடித்த செய்திதான் உனக்குத் தெரிந்திருக்குமே?...."

"ஆம், ஐயா! நான் கூடப் புயலுக்குப் பயந்து சாலை ஓரத்து யாத்திரை மண்டபம் ஒன்றில் சிறிது நேரம் தங்கியிருக்கும்படி நேர்ந்தது."

"கோட்டைக்குச் சற்றுத் தூரத்தில் சிவிகை வந்த போது சாலையில் பெரிய மரம் ஒன்று வேரோடு பெயர்ந்துவிழுந்துவிட்டது. அதிர்ஷ்டவசமாகப் பல்லக்கின் மீது விழாமல் பின்னால் வந்தவர்கள் மீது விழுந்தது. வைத்தியர் மகன் பினாகபாணி விழுந்த மரத்தடியில் அகப்பட்டுக் கொண்டான்!...."



வ்வாறு முதன் மந்திரி கூறிய போது, ஒரு பெண் குரல், "அந்தச் சண்டாளன் தலையில் மரம் மட்டுந்தானா விழுந்தது? இடி விழவில்லையா?" என்று ஆத்திரத்துடன் கூறியது கேட்டது.

முதன் மந்திரி அநிருத்தர் அளவிலாத வியப்புடன் பூங்குழலியை நோக்கினார். அவளை உற்றுப் பார்த்துக் கொண்டே, "திருமலை! இப்போது பேசியவள் இந்தப் பெண்தானா?" என்றார்.

"ஆம், ஐயா! அப்படித்தான் தோன்றியது."

"இது என்ன விந்தை? செவிட்டுக்குக் காது கேட்குமா? ஊமையும் பேசுமா?" என்றார் அநிருத்தர்.

"செவிட்டுக்குக் காது கேட்பதும், ஊமை பேசுவதும் மிகவும் விந்தையான காரியங்கள்தான். ஆனால் சர்வ சக்தி வாய்ந்த விஷ்ணுமூர்த்தியின் பக்தராகிய தாங்கள் மனம் வைத்தால் எந்த அற்புதந்தான் நடவாது? ஆழ்வார் திருவாய் மலர்ந்தருளியிருப்பது என்னவென்றால்...."

"போதும்! ஆழ்வார்களை இப்போது இங்கே இழுத்துத் தொந்தரவு செய்யாதே! இது விஷ்ணு பகவானின் கருணையினால் நடந்தது அல்ல. ஏதோ தவறு நடந்திருக்கிறது. இந்தப் பெண் நம்மை ஏமாற்றியிருக்கிறாள். இவள் யார்? இவளுடைய நோக்கம் என்ன? எதற்காக இவள் இத்தனை நேரமும் செவிட்டு ஊமை போல நடித்தாள்?"

"குருதேவரே! இந்தப் பெண்ணையே கேட்டு விடலாமே?"

"அப்பனே! உன் முகத்தில் தவழும் புன்னகையைப் பார்த்தால், உனக்கு ஒருவேளை தெரிந்திருக்கக் கூடுமோ என்று தோன்றுகிறது. சரி; இவ



ளையே கேட்டு விடுகிறேன். பெண்ணே! நீ செவிடு இல்லையா? நான் பேசுவது உனக்குக் காது கேட்கிறதா?....''

''ஐயா! நான் செவிடாயிருக்கக் கூடாதா என்று சில சமயம் விரும்பியதுண்டு. ஆனால் எனக்குக் காது கேட்பது பற்றி இப்போது சந்தோஷப்படுகிறேன். அந்தச் சண்டாளன் வைத்தியர் மகன் தலையில் மரம் ஒடிந்து விழுந்த செய்தியைக் கேட்டேன் அல்லவா? சுவாமி! அவன் செத்து ஒழிந்தானா?'' என்றாள் பூங்குழலி.

''ஆகா! உனக்குக் காது கேட்கிறது. பேசவும் பேசுகிறாய். நீ ஊமை அல்ல!'' என்றார் அநிருத்தர்.

''நிச்சயமாய் இந்தப் பெண் ஊமை இல்லை!'' என்றான் சீடன்.

''ஆகா! நான் ஊமையில்லை என்பதைக் கண்டுபிடித்து விட்டீர்களே! சோழ சாம்ராஜ்யத்திலேயே மிக்க அறிவாளி முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் என்று நான் கேள்விப்பட்டது சரிதான்!'' என்றாள் பூங்குழலி.

''பெண்ணே! என்னைப் பரிகாசமா செய்கிறாய்? ஜாக்கிரதை! நீ ஊமையில்லா விட்டால் நேற்று இரவு இங்கு வந்ததிலிருந்து பேசாமலிருந்தது ஏன்? ஊமை போல் நடித்தது ஏன்? உண்மையைச் சொல்லு!'' என்று கேட்டார் முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மாதிராயர்.

''ஐயா! நேற்றிரவு இங்கு நான் வந்து சேரும் வரையில் பேசத் தெரிந்தவளாகவே இருந்தேன். என்னை 'வாயாடி' என்று கூடச் சிலர் சொல்லுவதுண்டு. முதன் மந்திரியின் அரண்மனையைப் பார்த்து, இங்கு எனக்கு நடந்த இராஜோபசாரங்களைப் பார்த்ததும் பிரமித்து ஊமையாய்ப் போனேன். தங்கள் அரண்மனைப் பெண்மணிகள் என்னுடன் சமிக்ஞை மூலமாகப் பேசினார்கள். அவர்கள்

எல்லாரும் ஊமை என்று எண்ணி நானும் சமிக்ஞையாக மறுமொழி சொன்னேன். தங்களுடைய பேச்சைக் கேட்ட பிறகு, எனக்கும் பேச்சு நினைவு வந்தது.....''

''நீ பெரிய வாயாடி என்பதில் சந்தேகமில்லை. உன்னை எப்படித்தான் அந்த வைத்தியர் மகன் பிடித்துக் கொண்டு வந்தான் என்பதை நினைத்தால் ஆச்சரியமாயிருக்கிறது. அவன் முட்டாளாயிருந்தாலும் சாமர்த்தியசாலிதான்.''

''சுவாமி! அந்தப் பாவி மகன் என்னைப்பிடித்துக்கொண்டுவரவில்லை. அதற்குப் பிரயத்தனப்பட்டிருந்தால், இத்தனை நேரம் அவன் யமலோகத்துக்கு நிச்சயமாக யாத்திரை செய்து கொண்டிருப்பான்!'' என்று கூறிப் பூங்குழலி தன் இடுப்பில் செருகியிருந்த கத்தியை எடுத்துக் காட்டினாள்.

''பெண்ணே! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். கத்தியை இடுப்பிலே செருகிக் கொள். அவன் பேரில் உனக்கு ஏன் இத்தனை கோபம்? அவன்தான் உன்னைப் பிடித்து வரவில்லை என்றாயே?''

''என்னை அவன் பிடித்துக் கொண்டு வரவில்லை. ஆனால் என்னை அவன் ஆட்கள் படகிலே சேர்த்துக் கட்டிப் போட்டு விட்டு வந்தார்கள். என் அண்ணியை மரத்திலே சேர்த்துக் கட்டி விட்டார்கள். இத்தனைக்கும் அந்தச் சண்டாள வைத்தியர் மகன் தனக்கு இதில் ஒரு சம்பந்தமும் இல்லையென்று என்னிடம் சொன்னான்....''

''அந்தவரையில் அவன் புத்திசாலிதான். நான் சொன்னபடியே அவன் நடந்து கொண்டிருக்கிறான்....''

''ஐயா, முதன் மந்திரியே! அந்த தூர்த்தனை அனுப்பியது தாங்கள் தானா? வாயில்லாப் பேதையாகிய என் அத்தையைப் பிடித்துக் கொண்டு வரக் கட்டளையிட்டதும் தாங்கள் தானா?''

''உன் அத்தையா? கரையர் மகள் மந்தாகினி உன் அத்தையா? அப்படியானால், நீ?..... கலங்கரை விளக்கத்துக் காவலர் தியாக விடங்கருக்கு நீ என்ன வேணும்?'' என்று அநிருத்தர் கேட்டார்.

''ஐயா! அவருடைய அருமைப் புதல்விதான் நான்!''

''ஆகா! தியாக விடங்கருக்கு இவ்வளவு வாயாடியான ஒரு மகள் இருக்கிறாள் என்பது எனக்கு இதுவரை தெரியாமற் போயிற்று!''

''இதை வெளியில் சொல்ல வேண்டாம், ஐயா!''

''ஏன், பெண்ணே!''

''சோழ சாம்ராஜ்யத்தின் முதன் மந்திரி பிரம்மராயருக்குத் தெரியாத விஷயம் எதுவுமே இல்லை என்று நாடெல்லாம் பிரசித்தமாயிருக்கிறது. தங்களுக்கு ஒன்று தெரியாது என்று ஏற்பட்டால், தங்களிடம் மக்களுக்குள்ள மதிப்புக்குப் பங்கம் வந்து விடாதா?''

''பெண்ணே! என் மதிப்பைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. எனக்குத் தெரியாத இன்னொரு செய்தியை மட்டும் சொல்லி விடு.



உன் அத்தையைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள் என்றாயே? அவள் இப்போது எங்கே? நான் அனுப்பிய பல்லக்கில், நீ எப்படி ஏறிக் கொண்டாய்? எவ்விடத்தில் ஏறிக் கொண்டாய்?'' என்று அநிருத்தர் கேட்டார்.

''ஐயா! வாயில்லா ஊமையாகிய என் அத்தையைத் தாங்கள் எதற்காகக் கைப்பற்றிக் கொண்டு வர ஆட்களை அனுப்பினீர்கள்?''

''மகளே! அதை உன்னிடம் சொல்லுவதற்கில்லை. அது பெரிய இராஜாங்க சம்பந்தமான விஷயம்.''

''தந்தையே! அப்படியானால், தாங்கள் கேட்ட கேள்விகளுக்கு நானும் மறுமொழி சொல்ல இயலாது.''

''சொல்லும்படி செய்வதற்கு வழிகள் இருக்கின்றன.''

''என்னிடம் பலிக்காது!''

''பெண்ணே! உன்னைப் பாதாளச் சிறைக்கூடத்துக்கு அனுப்புவேன்...''

''எந்தப் பாதாளச் சிறையிலும் என்னை அடைத்து வைத்திருக்க முடியாது.''

''பாதாளச் சிறைக்கு ஒரு தடவை போனவர்கள் திரும்பி வருவதில்லை....''

''திரும்பி வந்த ஒருவனை எனக்குத் தெரியும், ஐயா! நேற்றுக் கூடச் சேந்தன் அமுதனுடன் பேசிக் கொண்டுதான் பிரயாணம் செய்தேன்....''

''அவன் யார் சேந்தன் அமுதன்?....''

''அவன் என்னுடைய இன்னொரு அத்தையின் மகன். அவனும் நானுமாகத்தான் கோடிக்கரையிலிருந்து வந்து கொண்டிருந்தோம்.''

''எதற்காக, மகளே?''

''இந்தத் தஞ்சாவூரிலுள்ள மாட மாளிகை கூட கோபுரங்களைப் பார்க்க வேண்டுமென்று வெகு காலமாக ஆசை உண்டு. சக்கரவர்த்தி சுந்தர சோழரைத் தரிசிக்க வேண்டும் என்றும் ஆவல் கொண்டிருந்தேன். சக்கரவர்த்திக்கு உடல் நலமில்லையென்று சொன்னார்களே? இப்போது எப்படியிருக்கிறது. ஐயா! நான் பார்க்கலாமா?''

''அப்படியேதான் இருக்கிறது. மகளே! அபிவிருத்தி ஒன்றுமில்லை. ஆகையால் சக்கரவர்த்தியைத் தரிசிக்கும் எண்ணத்தை மறந்து விடு!....''

''அது எப்படி மறக்க முடியும், ஐயா! சக்கரவர்த்தியை நான் பார்த்தேயாக வேண்டும். பார்த்து, அவருடைய தர்மராஜ்யத்தில், பெண்களைப் பலவந்தமாகப் பற்றிக் கொண்டு வரும் அக்கிரமம் நடக்கும் செய்தியைச் சொல்ல வேண்டும்....''

''பெண்ணே! உன்னோடு வெறும் விவாதம் செய்து கொண்டிருக்க எனக்கு நேரம் இல்லை. உன்னைப் பலவந்தமாகப் பற்றிக் கொண்டு வர நான் கட்டளையிடவும் இல்லை. நான் அனுப்பிய பல்லக்கில் நீ எப்படி ஏறிக் கொண்டாய், அதைச் சொல்! யாராவது உன்னைப் பலவந்தமாகப் பிடித்துப் பல்லக்கில் ஏற்றினார்களா?''

''இல்லை, சுவாமி! அது மட்டும் இல்லை. தஞ்சைக் கோட்டைக்கு அருகில் வரும் சமயத்தில் இந்தப் பல்லக்கு வெறுமையாக இருந்தது. மழையாயிருக்கிறதே என்று நானாகவேதான் பல்லக்கில் ஏறிக் கொண்டேன்......''



தன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் தமது சீடனாகிய ஆழ்வார்க்கடியானைப் பார்த்து, ''ஒருவாறு எனக்கு இப்போது விஷயம் விளங்குகிறது. வழியில் புயலும் மழையுமாயிருந்த போது பல்லக்கை எங்கேயோ இறக்கியிருக்கிறார்கள். அச் சமயம் இவள் அத்தையைப் பல்லக்கிலிருந்து இறக்கி விட்டு இவள் ஏறிக் கொண்டிருக்கிறாள். வைத்தியர் மகன் பேரில் மரம் விழுந்து பிரக்ஞை இழந்து விட்டபடியால் அவனால் கவனிக்க முடியவில்லை. சிவிகை தூக்கிய மற்றவர்கள் கவனிக்கவில்லை. கோட்டை வாசலுக்குச் சமீபத்திலே தான் இது நடந்திருக்க வேண்டும், திருமலை! என்னுடைய ஊகம் சரியாயிருக்கும்

என்று உனக்குத் தோன்றுகிறதா?'' என்று கேட்டார்.

''சுவாமி! தாங்கள் இப்போது ஊகித்துச் சொன்னபடியேதான் நடந்தது. நானே கண்ணால் பார்த்தேன்.''

''நீ பார்த்தாயா? அது என்ன? இத்தனை நேரம் ஏன் வாயை மூடிக் கொண்டிருந்தாய்? சீக்கிரம் சொல்லு!''

''நேற்று முன்னிரவில் மழைக்கால இருட்டில் கோட்டை வாசலை நெருங்கி வந்து கொண்டிருந்தேன். பெரும் புயலும் மழையும் அடித்தன. மரங்கள் முறிந்து விழுந்தன. சாலையோரத்து யாத்ரிகர் மண்டபம் ஒன்றில் சிறிது நேரம் தங்கியிருக்கலாம் என்று சென்றேன். அங்கே நான் ஒதுங்கிய சிறிது நேரத்துக்கெல்லாம் இந்தப் பெண்ணும் இன்னொரு வாலிபனும் வந்தார்கள். இவள் தன் அத்தை மகன் என்று சொன்னாளே, அவனாக இருக்கலாம். மின்னல் வெளிச்சத்தில் அவன் கழுத்தில் உருத்திராட்சம் கட்டியிருப்பதைப் பார்த்தேன். பிஞ்சிலே பழுத்த சைவன் என்று தெரிந்து கொண்டு அவனிடம் 'வைஷ்ணவத்தின் பெருமையைச் சொல்லலாம்; சற்றுப் பொழுது போகும்' என்று எண்ணினேன். இதற்குள் அதே மண்டபத்தின் முகப்பில் ஒரு சிவிகையைக் கொண்டு வைத்தார்கள். சிவிகையின் திரையில் பழுவேட்டரையரின் பனைச் சின்னம் தெரிந்தது. சிவிகையிலிருந்து ஒரு பெண் இறங்கி இவர்கள் அருகில் வந்தாள். மண்டபத்தில் இருள் கவிந்த இடத்தில் மூன்று பேரும் ஏதோ ஜாடைமாடையாகப் பேசிக் கொண்டார்கள். பிறகு இவள் போய்ப் பல்லக்கில் ஏறுவதைப் பார்த்தேன். மின்னல் வெளிச்சத்தில் 'பல்லக்கிலிருந்து இறங்கியவள் வேறு; மறுபடி ஏறியவள் வேறு' என்று தெரிந்து கொண்டேன். பல்லக்குத் தூக்கிகள் இதையொன்றும் கவனிக்கவில்லை. மழை சிறிது நின்றதும், பல்லக்கைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டுப் போய் விட்டார்கள்!......''

''ஆகா! அப்படியா என்னை ஏமாற்றி விட்டார்கள்? இத்தனை நேரம் சொல்லாமல் சும்மா இருந்தாயே? அந்த இரண்டு பேரும் பிறகு என்ன செய்தார்கள்?''

''பல்லக்குப் போன பிறகு அவர்களும் போய் விட்டார்கள். பின்னர் நானும் புறப்பட்டேன்.....''

''திருமலை! நீ ஏன் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு சும்மாயிருந்தாய்? இவள் அத்தையை நீ ஏன் தடுத்து நிறுத்தவில்லை? நீயும் இவர்களுடைய சூழ்ச்சியில் கலந்து விட்டாயா, என்ன?''

''அபசாரம், குருதேவரே! அபசாரம்! அத்தகைய துரோகத்தை நான் செய்யக் கூடியவனல்ல. முதலில், இதெல்லாம் தங்கள் ஏற்பாடு என்று எனக்குத் தெரியாது. பழுவூர் அரண்மனைப் பல்லக்கு ஆனபடியால், சின்னப் பழுவேட்டரையருடைய காரியமாயிருக்கலாம் என்று எண்ணினேன். மேலும், மந்தாகினி தேவியை என்னால் தடுத்து நிறுத்த முடியுமா? புயற்காற்றை அணை போட்டு நிறுத்தினாலும் நிறுத்தலாம்; அந்த மாதரசியை நிறுத்த முடியுமா? இலங்கையிலேயே முயன்று பார்த்துத் தோல்வி அடைந்தவன்தானே? மேலும் அந்த அம்மாளுக்கு என்னை அடையாளம் தெரியும். பார்த்ததும் மிரண்டு ஓடிப் போவார்கள். பிறகு யாராலும் அவரைப் பிடிக்க முடியாது......''

''அதை நினைத்தால், வைத்தியர் மகன் கெட்டிக்காரன் என்றே தோன்றுகிறது. இத்தனை தூரம் அழைத்துக் கொண்டு வந்து விட்டான் அல்லவா?''

''குருதேவரே! இந்த விஷயத்தில் தங்கள் ஊகம் சரியல்லவென்று தோன்றுகிறது. மந்தாகினி தேவி தாமே விரும்பித்தான் வந்திருக்க வேண்டும். தஞ்சையை நெருங்கியதும் அவருடைய மனம் மாறியிருக்க வேண்டும்....''

''இருக்கலாம்; இருக்கலாம். ஆனாலும் இதற்குள் அதிக தூரம் அந்தக் கரையர் மகள் போயிருக்க முடியாது. இரவெல்லாம் காற்றும் மழையுமாக இருந்ததல்லவா? சமீபத்திலேதான் எங்கேயாவது இருக்க வேண்டும். திருமலை! எப்படியாவது அவளைப்

பிடித்தாக வேண்டும். ஒருவேளை இந்தப் பெண்ணுக்கு அவள் தங்குமிடம் தெரிந்திருக்கலாம்... மகளே! உன் பெயர் என்ன?''

''பூங்குழலி, ஐயா!''

''ஆகா! அழகான பெயர்! பெயர் வைப்பதில் தியாகவிடங்கரின் சாமர்த்தியத்துக்கு இணையே கிடையாது. பூங்குழலி! உன் அத்தை எங்கே தங்கியிருப்பாள் என்று உனக்குத் தெரிந்திருக்கும். தெரிந்தால், சொல்லு! அவளுக்கு ஒன்றும் கெடுதல் நேராது.''



ங்குழலி சிறிது யோசித்து விட்டு, ''சுவாமி! என் அத்தை இப்போது இருக்கக்கூடிய இடம் எனக்குத் தெரியும். அவளை எதற்காகத் தாங்கள் பிடித்துக் கொண்டு வரச் செய்தீர்கள் என்று சொன்னால், நானும் அவள் இருக்குமிடத்தைச் சொல்லலாம்.....

''பூங்குழலி! அது பெரிய இராஜாங்க விஷயம். அரண்மனையைப் பற்றிய இரகசியம். உன்னிடம் சொல்ல முடியாது.''

''நானும் சொல்ல முடியாது!''

''இந்தப் பெண்ணுடன் பேசிச் சாத்தியப்படாது...''

''ஐயா! ஒரு நிபந்தனையை நிறைவேற்றுவதாயிருந்தால்.....''

''ஆகா! எனக்கு இந்தப் பெண் நிபந்தனை போடுகிறாளாம்! அது என்ன?''

''என் அத்தையைத் தஞ்சாவூர்ச் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்து மணிமகுடம் சூட்டுவதாயிருந்தால், அவளை நானே அழைத்து வருகிறேன்.''

''திருமலை! இந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறது....!''

''அதை இப்போதுதானா கண்டீர்கள், குருதேவரே! இவளை ஒன்றும் கேட்கவே வேண்டாம். இவள் அத்தை இருக்குமிடம் எனக்குத் தெரியும். இவள் அத்தை மகன் சேந்தன் அமுதன் கோட்டைக்குச் சற்றுத் தூரத்தில் பூந்தோட்டத்தில் இருக்கிறான். அவனும் அவனது அன்னையும் தளிக்குளத்தார் கோயிலுக்குப் புஷ்ப கைங்கரியம் செய்கிறவர்கள். அங்கேதான் தாங்கள் தேடும் பெண்மணி இருக்கிறாள். என்னுடன் சில ஆட்களை அனுப்பினால், அழைத்து வருகிறேன்!'' என்றான் ஆழ்வார்க்கடியான். பூங்குழலி திருமலையை எரித்து விடுகிறவள் போலப் பார்த்து விட்டு, ''அப்படி ஏதாவது செய்தால், நான் இப்போதே சக்கரவர்த்தியின் அரண்மனை முன்னால் சென்று முறையிடுவேன்! நீங்கள் செய்யும் அக்கிரமம் ஊரெல்லாம் அறியும்படி செய்வேன்!'' என்றாள்.

''திருமலை! இவளைப் பாதாளச் சிறைக்கு அனுப்பி வைக்க வேண்டியதுதான்; வேறு வழி இல்லை!'' என்றார் அநிருத்தப் பிரம்மராயர்.

''என் அருகில் யாராவது வந்தால் கொன்று விடுவேன்!'' என்று பூங்குழலி மடியில் செருகி வைத்திருந்த கத்தியை எடுத்துக் காட்டினாள்.

''ஐயா! இந்தப் பெண்ணைப் பாதாளச் சிறைக்கு அனுப்ப வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக இளையபிராட்டி குந்தவை தேவியின் மாளிகைக்கு அனுப்பி வைக்கலாம். இளைய பிராட்டி இப்போது இங்கேதானே இருக்கிறார்? அவர் இந்தப் பெண்ணின் பைத்தியத்தைத் தெளிய வைப்பார்! இளைய பிராட்டிக்கும் இந்தப் பெண்ணினால் ஆக வேண்டிய காரியம் ஏதேனும் இருக்கலாம்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''எதனால் சொல்லுகிறாய்? இளையபிராட்டிக்கு இந்தப் பெண்ணின் மூலமாக என்ன காரியம் ஆக வேண்டியிருக்கப் போகிறது?......''

''குருதேவரே! தங்களுக்குத் தெரியாதா? நேற்று மாலை இங்கு அடித்த புயல் சோழ நாட்டுக் கடற்கரையோரமாக அதாஹதம் செய்து விட்டிருக்கிறதாம்! தங்கள் அரண்மனை வாசலில் நாலாபுறமிருந்தும் தூதர்கள் வந்து காத்திருக்கிறார்கள்......''

''ஆம், ஆம்; அவர்களையெல்லாம் நான் இப்போது பார்க்க வேண்டும். அதற்குள் இந்தப் பெண்ணி

# பாலின் சத்து.
# ட்ருவின் அன்பு.

புதிய

ட்ரு

ப்யூர்
மில்க் பிஸ்கட்






சிறந்த பொருட்களைக் கொண்டு அன்புடனும்
அக்கறையுடனும் தயாரிக்கப்படுவது

## அருள்வாக்கு



'உபாத்யாயர்' என்ற ஸம்ஸ்கிருத வார்த்தைதான் 'வாத்யார்' என்றாகியிருக்கிறது.

உபாத்யாயர் என்றால் என்ன?

உப அத்யாயர்தான் உபாத்யாயர்.

அத்தியாயர் என்றவுடன் 'அத்யாயம்' நினைவு வரும்.

அத்தியாயம் என்றால் தொடர்கதையில் ஒவ்வொரு வாரமும் வருகிற பாகம் என்று சொல்வீர்கள். இது தற்காலத்தில் ஏற்பட்ட பேர். ஒரு புஸ்தகத்தின் ஒரு ஸெக்ஷனுக்கு 'அத்யாயம்' என்ற பேர் பிற்காலத்தில் வந்தது. ஆதியில் எழுதவே கூடாத புஸ்தகமாக, காதால் கேட்டுக் கேட்டே பாடம் பண்ண வேண்டிய புஸ்தகமாக உள்ள வேதத்தைப் படிப்பதற்குத்தான் அத்யயம், அத்யயனம், அத்யாயம் என்றெல்லாம் பேர் இருந்தது. வேதத்தை வைத்துத்தான் நம் வாழ்க்கையில் ஸகலமுமே. ஆதலால் பிற்பாடு கதை, காவ்யம், ஸெக்யுலர் ஸயன்ஸ், ஆத்மார்த்தமான சாஸ்த்ரம் எதுவானாலும் அதில் படிக்க வேண்டியவற்றைப் பகுதி பகுதியாக வரையறை செய்த போது அவற்றுக்கும் அத்தியாயம் என்று பெயர் கொடுத்தார்கள். புஸ்தகத்தின் ஸெக்ஷன் (பகுதி) ஸப்ஸெக்ஷனுக்கு (உட்பிரிவு) அநேக பெயர்கள் இருப்பதில் அத்யாயம் என்பதும் ஒன்றாயிற்று. காண்டம், கண்டம், சர்கம், படலம், பர்வம், பரிச்சேதம், உச்சவாஸம், உல்லாஸம், அங்கம், ப்ரகரணம், ஸ்கந்தம் என்றிப்படி அநேக பெயர்களில் ஒரு புஸ்தகத்தின் பகுதிகளைச் சின்னதும் பெரிசுமாகப் பிரிப்பதுண்டு. அவற்றிலே வேத அடிப்படை கொண்ட வார்த்தையாக அத்யாயம் என்பது இருக்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

டம் பேசக் கொடுத்ததில் வெகு நேரம் வீணாகிவிட்டது. இவள் ஊமையாகவே பிறந்திருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும்......''

''கேள்வி முறையில்லாமல் கொடுமை செய்யலாம் அல்லவா?'' என்று முணுமுணுத்தாள் பூங்குழலி.

''நாகைப்பட்டினத்துக்குப் பெரிய ஆபத்து என்று கேள்விப்படுகிறேன். கடல் பொங்கி வந்து நகரையே மூழ்க அடித்து விட்டதாகச் சொல்கிறார்கள்...

இந்த வார்த்தைகளைக் கேட்டு முதன் மந்திரி அநிருத்தர், பூங்குழலி இருவருமே திடுக்கிட்டார்கள்.

......அதைப் பற்றித் தங்களிடம் விசாரிப்பதற்கு இளைய பிராட்டியே ஒரு வேளை இங்கே வந்தாலும் வரக்கூடும்!'' என்று முடித்தான் ஆழ்வார்க்கடியான்.

அவன் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே அரண்மனை வாசலில் ஜய கோஷத் தொனிகள் கேட்டன.

''திருமலை! நீ எப்போது ஞான திருஷ்டி பெற்றாய்? இளைய பிராட்டி தான் வருகிறார்போலிருக்கிறது!'' என்று சொல்லிக் கொண்டு அநிருத்தர் எழுந்து வாசலை நோக்கி நடந்தார்.

அதற்குள் அதே வாசல் வழியாகக் குந்தவை தேவியும் வானதியும் உள்ளே பிரவேசித்தார்கள்.

பூங்குழலி அங்கே நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் இளைய பிராட்டியின் திருமுகத்தில் குடி கொண்டிருந்த கவலைக் குறி மறைந்து, வியப்பும் உவகையும் ஒருங்கே பிரதிபலித்தன.

(தொடரும்)

# கனவுகள் கலைந்தபோது...

கமலா கந்தசாமி

**"மே**..ஐ..கம்...இன்'' என்றபடி கதவைத் தட்டினாள் நித்யா. கதவு தான் போடாமல் இருந்தது. தானாகவே திறந்து கொண்டது.

கையில் ரிஸீவருடன் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்த பிரதாப், ஒரு வினாடி இவளைப் பார்த்துச் சிரித்து, மறு கையால் மௌனமாக நாற்காலியைக் காட்டினான். உட்கார்ந்தாள்.

''நோ...நோ... பிஸினெஸ்தான். அதிலும் ஒரு லட்சியம் வேணும். வீண் காம்பெட்டிஷனுக்கு இத்தனை லட்சத்தை விளம்பரத்துல வேஸ்ட் பண்ண வேண்டாம். அதுவும் நம்ம ஹோம்லி ப்ராடக்ட்ஸுக்குச் சம்பந்தமில்லாம, அரைகுறை ஆடையுடன் பெண்களைக் கொச்சைப்படுத்தி விளம்பரம் செய்யறதுல எனக்கு இஷ்டமில்லே. ஸாரி...'' என்று பாதியிலேயே பேச்சைக் கட் பண்ணி விட்டு, நித்யா பக்கம் திரும்பி, ''ஹலோ... முக்கியமான பிஸினஸ் மேட்டர்...!'' என்றான்.

''உங்கள் பேச்சிலேயே தெரிந்தது'' என்று சொல்லிச் சிரித்தாள். அறை முழுதும் சிரிப்பு எதிரொலித்தது. 'எப்படி இவளால் மட்டும் இவ்வளவு அழகாய்ச் சிரிக்க முடிகிறது' என மனத்திற்குள் வியந்த பிரதாப், ''நித்யா... நீ சிரிச்சா மனசே நிறைந்து போகுது. சிரிப்புக் கூடத் தொத்து வியாதி மாதிரி. நீ வந்தா... எனக்குள்ளே.. ஒரு சிரிப்பு. சந்தோஷம்...''

''அப்பாகிட்டே நம்ம மேரேஜ் பற்றிக் கட்டாயமாகப் பேசினீர்களாமே...?'' என்றாள் நித்யா.

''இதோ பாரு நித்யா. எனக்கு இப்போ வயசு என்ன தெரியுமா முப்பத்திரண்டு. இன்னும் மூணு வருஷம் போயிட்டா... இப்ப இருக்கிற முடியில் பிஃப்டி பர்சண்ட் போயிடும். அப்புறம்... தாத்தான்னு கூப்பிடற வயசில பிள்ளை வந்து அப்பான்னு கூப்பிட்டா நல்லா இருக்குமா...?'' என்று சொன்னான்.

''அழகாப் பேசக் கத்துக்கிட்டீங்க...'' என்றாள் நித்யா.

''பி.ஏ. ஃபைனல் முடிச்சிடறேன்னு சொன்னே.. ஒரு வருஷம் வெயிட் பண்ணினேன். அப்புறம் எம்.ஏ. லிட்டரேச்சர் என்எய்ம்னு சொன்னே.. ரெண்டு வருஷம் வெயிட் பண்ணிட்டேன்... இன்னும் என்னால் பொறுக்க முடியாது நித்யா...'' என்றான் பிரதாப்.

''பொறுக்க முடியலேன்னா என்ன செய்வீங்க...?'' என்றாள் சிரிப்பு மாறாமல்.

''எஸ்... நித்யா... உனக்குச் சம்மதம் இல்லேன்னா... அப்புறம் உனக்காக ஏங்கறதில அர்த்தம் என்ன இருக்கு? எப்படியோ தனியா வாழப் போறதில்லே. ஒரு பெண் துணை – மனைவி – குடும்பம்னு வாழறது தானே உலகம். அடுத்த ஸ்டெப்பிற்கு என்னை ஆயத்தப்படுத்திக்க வேண்டியது தான். வேறு வழி...?''

பிரதாப்பின் வெளிப்படையான பேச்சு மனத்தில் தைத்தது. அப்பா என்னைப் பிரதாப்புக்காகவே பெற்று வளர்த்ததாகச் சொல்கிறார். இவனும் வெளிப்படையாகவே திருமணத்துக்குக் கேட்டு விட்ட பிறகு, இனியும் தன் மனத்தை மறைப்பதில் அர்த்தமில்லை என்பதை உணர்ந்த நித்யா, தான் வேறு ஒருத்தனை நேசிப்பதை எப்படிச் சொல்வது என்ற தடுமாற்றத்தில் ஒரு நிமிட அமைதி.

''உனக்குப் பிரியம் இருந்தாத்தான் நித்யா... என் மாமா பொண்ணுங்கறதுக்காக நான் உன்னைக் கட்டாயமாகக் கல்யாணம் பண்ணிக்க விரும்பலை. உன்னை எனக்குப் பிடிச்சிருக்கு. ஆனாலும் நீ சம்மதிச்சாத்தான் நான் ஓ. கே. இல்லாட்டி... பரவாயில்லே...'' என்று சொல்லி விட்டு நிதானமாக ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு, அவனே தொடர்ந்தான்:

''ஏன் நித்யா தயங்கறே? சொல்லு. இஷ்டமில்லேன்னாச் சொல்லிடு. அவசரம் இல்லே... வீட்டுக்குப் போ. இரவு முழுதும் நல்லா யோசி. சம்மதம்னா நேரில் வா. நேரில் சொல்ல வெட்கமா இருந்தா.. இல்லே தயக்கமா இருந்தா, டெலிபோன்ல சொல்லு. ஒருவேளை உன் முடிவு வேறு விதமா இருந்தா ஒரு லெட்டர்ல நாலு வரி எழுதிப் போடு. என்ன சரிதானே...?''

எந்தவிதக் கலக்கமோ, தயக்கமோ இல்லாத பேச்சு. எதற்குமே அலட்டிக் கொள்ளாத இயல்பான பேச்சு.

'இல்லே பிரதாப்... உன் பிஸினெஸ் டைப் எனக்குப் பிடிக்கலே.. நான் ஒரு இளைஞனை நேசிக்கிறேன். அவன் லட்சிய வாதி; எழுத்தாளன்; கவிஞன்; கலையார் வம் மிக்கவன். என் லட்சிய தாகத்திற்கு.. இலக்கிய நயத்திற்கு உன் பிஸினெஸ் ஒத்து வராது'ன்னு எப்படிச் சொல்ல முடியும் என்ற தவிப்புடன் மனத்திற்குள் போராடிக் கொண்டிருந்த நித்யாவிற்குப் பிரதாப் சொல்லிய யோசனை சரியாகப்படவே யோசித்தாள்.

''என்ன நித்யா யோசிக்கறே? வேற யாரையாவது லவ் பண்றியா? அப்பா திட்டு வாருன்னு பயப்படறியா? ஒப்பனாச் சொல்லு. அப்படி இருந்தா அந்த அதிர்ஷ் டக்காரனுக்கு உன்னைக் கட்டி வைக்கறது என் பொறுப்பு....''

இதனைக்கூட எப்படி இவனால் சகஜ மாய்ச் சொல்ல முடிகிறது என்று வியந்த நித்யா, ''இல்லே,பிரதாப்.. நான் யோசிக் கணும். சீக்கிரமே என் பதிலைத் தெரியப்படுத்தறேன்...'' என்று கிளம்பி னாள். நாளைக்கு ஒரு கடிதம் மூலம் தன் மறுப்பைத் தெரியப்படுத்தலாம் என்ற முடிவு மனத்தில் உறுதிப்பட்டது.



''உட்கார்... பேச்சு சுவாரஸ்யத்தில் டீ... சொல்லலே. இரு. டீ சாப்பிட்டுப் போக லாம்...'' என்றான்.

டீ வந்தது. ஒரு கப்பை இவள் பக்கமாக நகர்த்தினான். எதிலும் அலட்டிக் கொள் ளாத அவன் ஸ்டைல் நித்யாவிற்குப் பிடிக் கும். 'டேக் இட் ஈஸி'ன்னு சுலபமாக எடுத் துக்கற துணிவு பிடிக்கும். ஆனால் கொஞ் சம் கூட இலக்கிய ரசனை... காதல்... இப்படி மெல்லிய உணர்வுகளுக்கு இடம் கொடுக்காத அந்த இயல்பு நெஞ்சில் உறுத் திட எழுந்தாள்.

''வரட்டுமா...'' என்றாள்.

''ஓ.கே.'' என்ற ஒற்றை வரியுடன் யாருக்கோ டெலிபோன் செய்ய ஆரம்பித் தான்.

வாசலுக்கு வந்தாள். 'வாசல் வரை வந்து வழி அனுப்பினால் என்ன குறைந்தா போகும்?' என்று மனத்திற்குள் பிரதாப் மீது கோபம் எழுந்தது. அடுத்த நிமிடமே, 'நாம் என்ன அவனையா கல்யாணம் பண்ணிக் கப் போகிறோம்' என்ற கேள்வி எழுந்தது. மொபட்டை மிதித்து ஸ்டார்ட் செய்தாள். வண்டியில் ஏறி உட்கார்ந்து டயம் பார்த் தாள்.

மாலை 5.10 தான்.

ஆத்மா... அனேகமாய்த் தன் அறையில் தான் இருப்பான் என்ற எண்ணம் உதித்த தும், மொபெட் அவன் இருக்கும் இடம் நோக்கி விரைந்தது.

வாசலில் நிறுத்தி ஹாரன் அடித்தாள். அடுத்த நிமிடம் மேல் மாடியின் பால்கனி யில் ஆத்மா நின்று கையசைத்தான். சட்டை போடாத மார்பில் உரோமம். லுங்கி கட்டி யிருந்தான். கையில் விரித்த நிலையில் பேனா. தலை கலைந்திருந்தது. எழுதிக் கொண்டிருக்கிறான் என்ற எண்ணத்தில் இரண்டு இரண்டு படிகளாக ஏறினாள்.

''வா... நித்யா'' என்றான் ஆத்மா என் கின்ற ஆத்மநாதன்.

''என்ன மும்முரமா எழுதிக்கிட்டிருந் தாப் போல இருக்கே... புதுசாக் கவி தையா...'' என்றபடி அறைக்குள்ளே நுழைந் தாள்.

மேஜை மீது வரிசையாக அடுக்கப்பட்ட முழு வெள்ளைத் தாட்கள்.

அடேயப்பா இத்தனை பக்கமா... என்ன இது நாவலா...'' என்று எடுக்கப் போனாள் நித்யா.

''ப்ளீஸ் இப்போ பாக்காதே. திட்டுவே. இன்னும் ஒரு வாரத்துல அழகான வார் னிஷ் அட்டைப் படத்தோட புக்காக வெளி வரும். அப்போப் பார்க்கலாம்...'' என்று ஓடி வந்து தடுத்தான் ஆத்மா.

''என்ன ஆத்மா, நீ கூட சஸ்பென்ஸ் வச்சுப் பேச ஆரம்பிச்சிட்டியா...?''

கரெக்ட்! அது சஸ்பென்ஸ் நாவல்தான். அதுதான் உன்கிட்டே கூடச் சொல்லலே...'' என்றான் ஆத்மா.

''வாட்... கவிஞர் ஆத்மா எப்போ சஸ் பென்ஸ் கதை எழுத ஆரம்பிச்சார்...?''



''கறவை மாடு வாங்கன்னு சொல்லி பாங்குலே லோன் போட்டு விட்டு ஆட்டுக்குட்டி வாங்கி இருக்கியே!''

''லஞ்சப்பணம் போக என் கைக்கு வந்த பணத்தில் இதாவது வாங்கமுடிந்ததே!''

— சுதர்ஸன்

என்று பாதி வியப்பும் பாதி கிண்டலும் கலந்து நித்யா கேட்க....

''பார்த்தியா... இப்படி நீ கிண்டல் பண்ணுவேன்னுதான் உன்கிட்டே மறைச்சேன். எனக்கு வேண்டியவர் ஒருத்தர், புதுசா மாத க்ரைம் நாவல் பத்திரிகை ஆரம்பிச்சிருக்கார். 'என்னடா கவிதை கவிதைன்னு உயிரை விடறே! யாரு இந்தக் காலத்தில கவிதையைச் சீண்டறா. பேசாம, செக்ஸியா க்ரைம், மர்டர்னு எழுது. நான் முதல் நாவலா உன் நாவலைப் போடறேன். அப்புறம் பாரு ஒரு வருஷத்தில சொந்தமாக் கார், பங்களான்னு உயர்ந்திடுவே'ன்னார். அதுதான் எழுதிக்கிட்டு இருக்கேன். அனேகமா முடிஞ்சிட்டுது. கடைசி அத்தியாயம்தான் பாக்கி...''

கண்களில் பெரிய மகிழ்ச்சியோடு ஆத்மா பேசிக் கொண்டே போக, இடிந்து போன நித்யா, ''நெஜமா... நீ... அந்த மாதிரி சீப்பா எழுத ஆரம்பிச்சிட்டியா ஆத்மா...?'' என்றாள். அந்தக் கேள்வியில் இருந்த ஏமாற்றம் புரிந்தது.

''என்ன செய்றது நித்யா? தெரிஞ்சோ, தெரியாமலோ, நான் வேலைக்கு ட்ரை பண்ணலே. வெறும் எம்.ஏ. இலக்கியப் பட்டம் சோறு போடுமா என்ன? நாளைக்கே நமக்குக் கல்யாணம் ஆகிக் குடும்பம்னு வந்தா, சாப்பாட்டுக்கு வழி? இருந்தாலும் என் லட்சியத்தை நான் மறக்கலே. 'ஆத்மா' என்கிற பெயரை நான் கொச்சைப்படுத்த விரும்பலே. கவிதைக்கும் நல்ல, தரமான சிறு கதைகளுக்கும் இந்தப் பெயர் இருக்கட்டும். இந்த மாதிரி நாவலுக்குக் 'குமாரி ப்ரியம்வதா' என்ற புனை பெயரைத் தேர்ந்தெடுத்திருக்கேன். பெயர்லகூட ஒரு வாசகனுக்கு கிக் வரணும் இல்லையா...?'' — ஆத்மா பேசிக் கொண்டே இருக்க, நித்யா இடிந்து போய் மௌனமாக அவன் எழுதி வைத்திருந்த கையெழுத்துப் பிரதியைப் புரட்டினாள்.

'துப்பாக்கி மார்பில் பதிந்தது. ட்ரிக்கரை இழுத்தான்.

சைலன்ஸர் பொருத்தப்பட்ட துப்பாக்கி ரவை மார்பைத் துளைத்தது. தீயில் ஜாக்கெட் கொஞ்சம் கருக, அதன் இடைவெளியில் அந்த அழகான சந்தன நிற மார்பு துளைக்கப்பட்டு....'

''ச்சீ...'' என்று மேலே படிக்க முடியாமல், கதை எழுதப்பட்டிருந்த தாளைத் தள்ளினாள். மனத்திற்குள் அந்நியப்பட்டாள். அருவருப்பு நெஞ்சில் கசந்தது.

''என்ன... நித்யா?'' என்று தன் எதிர்கால லட்சியக் கனவில் இருந்து விடுபட்ட ஆத்மா கேட்கப் பதில் சொல்லாமல் அந்த இடத்தைக் காட்டி...

''உனக்கு வெட்கமா இல்லே, உன்னைக் கவிஞன்னு சொல்லிக்க? துப்பாக்கிக் குண்டு துளைத்துச் சாகும் போது கூட அவளின் மார்பை வர்ணிக்கிற கொடூர புத்தி உனக்கு எப்படி வந்தது?

''ஓ... இந்த வரிகளைச் சொல்றியா? கவிஞர் ஆத்மா இதனை எழுதலே நித்யா. 'குமாரி ப்ரியம்வதா' எழுதியது இது. பாரு... இதனைப் படிச்சிட்டு... 'ஆகா என்ன நடை... என்ன வர்ணனை'ன்னு வாசகர் கடிதங்கள் குவியும் பாரு. இன்னும் கொஞ்ச நாளில் இந்த நடைக்கே ஒரு வாசகர் பேரவை அமைச்சாலும் அமைப்பாங்க நித்யா...'' — அவள் மனத்தின் உயரத்தில் இருந்த ஆத்மா கீழே விழுந்து விட்டான் என்பது புரியாத ஆத்மா... ஒரு பெரிய சிரிப்பைச் சொல்லி விட்டவன் போலச் சொல்லித் தனக்குத்தானே சிரித்துக் கொண்டு நித்யாவைப் பார்த்தவன் திடுக்கிட்டான்.

''என்ன... நித்யா இப்படி எழுதியது புடிக்கலையா? உன் ஆத்மா என்ற கவிஞன் தனிம்மா... அவன் மாறவே மாட்டான். இது குமாரி ப்ரியம்வதா....''

''அப்படின்னா.. நீயும் நடிக்க ஆரம்பிச்சிட்டே.... இரட்டைப் பெயரில் இரட்டை வேஷம் போட ஆரம்பிச்சிட்டே இல்லே...'' என்று கேட்டவளின் மனத்தில் 'ச்சே... பிஸினஸ் என்றாலும் ஒரு லட்சியம் வேணும் என்று தன் பிஸினஸ் விளம்பரத்தில் கூடப் பெண்களைக் கொச்சைப்படுத்தும் விளம்பரம் வேண்டாம் என்று சொன்ன பிரதாப்பை விட இந்தக் கவிஞன்... எப்படி உயர்வானவன்?' என்ற கேள்வி எழுந்தது. ஆத்மா அந்நியப்பட்டு நிற்பது தெளிவானது.

விடுவிடுவெனக் கீழே இறங்கி மொபெட்டை எடுத்துக் கொண்டு ஒரு பப்ளிக் டெலிபோன் முன்பு நிறுத்திக் கொண்டு எண் சுழற்றி... ''ஹலோ'' என்றாள்.

''எஸ்... பிரதாப் ஹியர்...'' என்றது எதிர் முனை.

''பிரதாப்.. நான் நல்லா யோசிச்சிட்டேன். எனக்குச் சம்மதம்...'' என்றாள் நித்யா.

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது: பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




4 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/3112/TAM

# இன்று இறப்பு விழா

கத்தி பகதூரின் அடிவயிற்றில் ஆழமாய்ப் பாய்ந்து, ரத்தம் கொட்டிக் கொண்டிருக்க, பகதூர் அவனுடைய கடைசி நிமிஷத்தின் கடைசி விநாடிகளில் உதடுகளை அசைத்தான். இந்தியிலும், மராத்தியிலும் ''வாழ்க இந்தியக் கழுகுகள்'' என்று உச்சரித்து, விவேக்கை புன்னகையோடு பார்த்தபடியே உயிரை விட்டான்.

விவேக் அவனருகே பதற்றமாய் மண்டியிட்டு உட்கார்ந்தான். யூனிபார்மின் சட்டைப் பைகளிலும், பாண்ட் பாக்கெட்டுகளிலும் கையை நுழைத்து நுழைத்து வெளியே எடுத்தான். ஒரு சிகரெட் லைட்டர், பாக்கெட் நோட், பத்து ரூபாய் நோட்டு ஒன்று, சில்லறை நாணயங்கள், ஒரு கர்ச்சீப்.

விவேக் பாக்கெட் நோட்டைப் புரட்டினான்.

முதல் பக்கம் 'ட்யூட்டி ஷெட்யூல்' அட்டவணை. இரண்டாவது பக்கம் ஹிந்தியில் ஏதோ ஸ்லோகம். பின்வந்த சில பக்கங்களில் ஏதோ செலவுக் கணக்குகள். அந்த பாக்கெட் நோட்டை முழுசுமாய்ப் புரட்டிப் பார்த்து விட்டு, இன்ஸ்பெக்டர் கிஷோரை ஏறிட்டான் விவேக்.

''கான்ஸ்டபிள் பகதூர்க்கு எத்தனை வருஷ சர்வீஸ்?''

''எட்டு வருஷம் ஸார்.''

''இதே ஊர்தானா...?''

''ஆமா... ஸார்...''

''அட்ரஸ்?''

''பைல்ல பார்க்கணும் ஸார்.''

''பார்த்துச் சொல்லுங்க... பகதூர் வீட்டுக்கு இப்பவே புறப்படறோம்.'' கிஷோர் நகர்ந்து போக, விவேக் மல்லாந்து விழுந்திருந்த பகதூரைப் பார்த்தான். அடிவயிற்றில் பரவியிருந்த ரத்த வட்டம் இப்போது பெரிதாகியிருக்க, அவனுடைய மூக்கு நுனியும் கன்னப் பகுதிகளும் வயலெட் நிறமாய்த் தெரிந்தன. மனசு கோபமாய்ப் பொருமியது.

'உயிர் சீக்கிரம் பிரிவதற்காகச் சயனைட் தடவிய கத்தியை உபயோகப்படுத்தியிருக்கிறான்.. ராஸ்கல்!'

அந்த நடுநிசியில் செக்யூரிடி ஃபோர்ஸ் ஜீப் ரைஃபிள் ஏந்திய கான்ஸ்டபிள்களோடு போக்குவரத்து இறந்து போன பம்பாய் ரோடுகளில் வேகமாய் பிறிட்டுக் கொண்டிருக்க — ஜீப்பின் உள்ளே விவேக்கும் இன்ஸ்பெக்டர் கிஷோரும் உட்கார்ந்திருந்தார்கள்.

''பகதூர் அட்ரஸை மறுபடியும் ஒரு தடவை சொல்லுங்க கிஷோர்...''

''நெம்பர் த்ரீ நாட் ட்டூ. கே. பிளாக். போலீஸ் காலனி, வித்யா நகர் கிர்காம்.''

''பகதூரோட பர்சனல் பைலைப் பார்த்தீங்களா?''

''பார்த்தேன் ஸார்.''

''ரிப்போர்ட் என்ன..?''

''சாடிஸ்ஃபேக்டரி.. பிளாக் மார்க் எதிலேயும் கிடையாது. பை குல்லா போலீஸ் ஸ்டேஷனில் மூணு வருஷம் சர்வீஸ். சின்னத் திருட்டுக் கேஸ்களை நிறையவே கண்டு பிடிச்சிருக்கான். ப்ரமோஷன் லிஸ்ட்ல பகதூரோட பேர் முதல் பத்து பேர் வரிசையில் இருக்கு ஸார்.''

''ஸோ... பகதூர் சமீபத்துலதான்.. இந்தியக் கழுகுகளுக்கு விசுவாசியா மாறியிருக்கணும்..''

''மே..பி.. ஸார்.''

ஜீப் நிமிஷங்களை பயணத்தில் காணாமல் போக்கி விட்டு, வித்யா நகர் போலீஸ் காலனிக்குள் நுழைந்தது. காலனி சாம்பல் இருட்டில் இருந்தது.

பார்த்தீனியச் செடிகளுக்கு மத்தியில் ஆங்காங்கே... கட்டடங்கள் முளைத்திருக்க, ஜீப் சிதிலமான மண் பாதையில் குதித்துக் குதித்து ஓடியது. ட்யூப் லைட் வெளிச்சம் ஆங்காங்கே தெரிந்தது. ஆள் நடமாட்டம் சுத்தமாக இல்லை.

''கே' பிளாக் எதுன்னு பாரு... காசிம்?''

ஒரு ஐந்து நிமிஷ நகர்த்தலுக்குப் பின், 'கே' பிளாக் வந்தது.

ஜீப் உடம்பின் உதறலை நிறுத்திக் கொள்ள, விவேக்கும் கிஷோரும் கீழே இறங்கினார்கள். மூன்று மாடிகளோடு தெரிந்த

ராஜேஷ்குமார்

'கே' பிளாக்கைப் பார்த்து, போனார்கள்.

''நெம்பர்...?''

''த்ரீ நாட் டூ ஸார்.''

விவேக்கும் — கிஷோரும் க்ரௌண்ட் ப்ளோரில் இருந்த வாசல் கதவைப் பார்த்தார்கள். 301.

''ஸார்... அநேகமாய் இரண்டாவது மாடியில் இருக்கலாம்.''

''வாங்க.''

விவேக் மாடிப்படிகளில் தாவினான்.

இரண்டாவது மாடிக்கு வந்து, 302 என்று வெள்ளை பெயிண்டால் எழுதப்பட்ட கதவுக்கு முன்பாய் நின்றார்கள். கிஷோருக்குக் கண்ணைக் காட்ட, அவர் கதவைத் தட்டினார்.

''டொக்... டொக்...''

கதவைத் தட்டி விட்டுக் காத்திருந்தார்கள். உள்ளே யாரோ இருமும் சத்தம் கேட்டது. தொடர்ந்து ஒரு நாற்காலி நகர்த்தப்பட்டு, ட்யூப் லைட் வெளிச்சம் பிடித்துக்



கொண்டது. நடைச் சத்தம் கதவை நெருங்கியது. "கோன்?" ஒரு ஆண் குரல் கேட்டது.

"போலீஸ்...."

கிஷோர் சொல்ல, கதவின் தாழ்ப்பாள் அவசரமாய் விலகியது. போர்வையைப் போர்த்துக் கொண்டு பெரியவர் ஒருவர் தூக்கக் கலக்கமாய் நின்றிருக்க, விவேக் கேட்டான்.

"கான்ஸ்டபிள் ப க தூ ர் வீடு இது தானே?"

"ஆமா."

"பகதூர் உங்களுக்கு என்ன ஆகணும்?"

"மகன்."

"வீட்ல வேற யார் இருக்காங்க?"

"நானும் என் மகனும்தான் இ ரு க் கோம்."

விவேக்கும், கிஷோரும் வீட்டுக்குள் நுழைந்தார்கள். பெரியவர் குழப்பமான முகத்தோடு கேட்டார். "பகதூரைப் பார்க்க வந்தீங்களா? அவன் ட்யூட்டிக்கு போயிருக் கானே?"

"கிஷோர்! அவருக்கு விஷயத்தைச் சொல்லிட்டிருங்க. நான் வீட்டை அலசிட றேன்..என்கொய்ரியை பின்னாடி வெச்சுக்கு வோம்.."

கிஷோர் தலையாட்ட, விவேக் நகர்ந்தான். சிறிய வீடு, இரண்டே அறைகள். ஒரு மேஜை, ஒரு பீரோ, சின்னதாய் சுவர் அலமாரி, ஓரமாய் ஒரு ட்ரங்க் பெட்டி, சுவரின் ஆணியில் போலீஸ் யூனிபார்ம்.

மேஜையை நெருங்கி ட்ராயரை இழுத்தான் விவேக். அடைசலாய் ஏதேதோ கண்ணுக்குச் சிக்கியது. ஓர் உடைந்த கூலிங் கிளாஸ், காலாவதியான கம் ட்யூப். இன்சுலேஷன் டேப். ஸ்க்ரு டிரைவர். 'ஆனந்த் மார்க்' என்று இந்தியில் எழுதப்பட்ட ஒரு புத்தகம். ஒரு ட்ரான்சிஸ்டர்; உயிரில்லாத பாட்டரி செல்கள்.

விவேக் கிளறிக் கொண்டே வந்தான். செப்புக் கம்பிச் சுருள். நான்கைந்து பால் பாயிண்ட் பேனாக்கள், துரு ஏறிய கத்தி, கால்குலேட்டர், மூக்குக் கண்ணாடி உறை.. ஆணிகள்..

சட்டென்று விவேக்கின் கைகள் நின்றன.

'சாவ்தான்' என்று இந்தியில் சிவப்பு மையால் தலைப்பிட்ட சின்னச் சின்ன பாக்கெட் சைஸ் புத்தகங்கள் கண்ணுக்குச் சிக்கின. விவேக் அவற்றை எடுத்தான். சிவப்பு மையில் அச்சிடப்பட்ட வாசகங்களை அவன் கண்கள் மேய்ந்தன.

"நண்பர்களே! நமது காலம் திரும்பிக் கொண்டிருக்கிறது. புழுக்களாய் இருந்தது போதும். புலிகளாய் மாறுவோம். வெறும் கரித்துண்டங்களாய் இருந்து பயனில்லை. கனல் துண்டுகளாய் மாறி நெருப்பைக் கக்கு வோம். அதற்கான காலம் வந்து விட்டது. இந்த தேசத்தைப் புரட்டிப் போட்டால்தான் நமக்கு விமோசனம். புரட்சி செய்வோம். புது வாழ்வு காண்போம்" — இதே மாதிரியான வாக்கிய அமைப்புக்களோடு, எல்லாப் புத்தகங்களுமே இருக்க, விவேக் அவற்றை அள்ளி அடுக்கினான்.

இன்ஸ்பெக்டர் கிஷோர் குரல் கொடுத்தார்.. பின்பக்கமிருந்து.

"ஸார்..."

"என்ன...? மகனோட பராக்கிரமத்தை அப்பாகிட்டே சொல்லிட்டீங்களா...?"

"சொல்லிட்டேன் ஸார். அவர் 'ஷாக்' வாங்கின மாதிரி நின்னுட்டிருக்கார்." கிஷோர் சொல்ல, விவேக் அந்தப் புத்தகங்களைக் கர்ச்சீப்பால் கட்டி மேஜையின் மேல் வைத்து விட்டுப் பெரியவரிடம் வந்தான்.

"உங்களுக்கு பகதூர் ஒரே மகனா...?"

"ஆமாம்" அவர் கண்களில் நீரோடு தலையாட்டினார். உதடுகள் லேசான துடிப்பில் இருந்தன. விவேக் தொடர்ந்து கேட்டான்.

"இந்தியக் கழுகுகளைப் பத்தி உங்களுக்குத் தெரியுமா?"

"தெரியாது."

"உங்க மகனோட சமீப கால நடவடிக்கைகள் உங்களுக்குச் சந்தேகமா தோணலையா...?"

"எ..எனக்கு எந்தச் சந்தேகமும் தோணலை. அவன் எப்பவும் போலத்தான் இருந்தான்."

இந்த 'சாவ்தான்' புத்தகம் பகதூருக்கு எப்படிக் கிடைச்சுதுன்னு சொல்ல முடியுமா...?"

"எ...எனக்குத் தெரியாது."

"இந்தப் புத்தகத்தை நீங்க படிச்சிருக்கீங்களா?"

"எ...எனக்கு எழுதப் படிக்கத் தெரியாது."

"உங்க பேரென்ன?"

"தயாபாய்..."

"ஏதாவது வேலைக்குப் போறீங்களா?"

"மொதல்ல கூர்க்காவா இருந்தேன். இப்ப இல்ல..."

"உங்க மகன் பகதூரைத் தேடி யாராவது இங்கே வருவாங்களா?"

"யாரும் வர மாட்டாங்க."

"இதோ பாருங்க தயாபாய்! உங்க மகன் பகதூர் செத்துட்டான். செத்துப் போனவனை இனிமே நீங்க காப்பாத்த நினைக்காதீங்க. அவன் தேச விரோதிகளோடு தொடர்பு வெச்சிருந்திருக்கான். அவனைத் தேடி கண்டிப்பா யாராவது வந்திருக்கணும். ஞாபகப்படுத்திப் பாருங்க."

தயாபாய் போர்வையின் நுனியில் கண்ணின் ஈரத்தை ஒற்றிக் கொண்டார்.

"பகதூரைப் பத்தி நீங்க சொல்ற ஒவ்வொண்ணையும் கேட்கும் போது, எனக்குத் திகிலாவும் ஆச்சர்யமாவும் இருக்கு. தேச விரோத சக்திகளோடு அவன் சேர்ந்திருந்தா எனக்கு நிச்சயம் தெரிந்திருக்கும்."

"நீங்க எந்த நேரமும் வீட்லதான் இருப்பீங்களா?"

"இல்ல. சாயந்திர நேரங்களில் வெளியே வாக் போய்ட்டு ஏழு மணிக்கு மேல்தான்

வருவேன்.''

''அந்த நேரத்துல பகதூர் வீட்லதானே இருப்பான்?''

''ஆமா..''

''அது போதுமே...'' — சொன்ன விவேக் கிஷோரிடம் திரும்பினான். ''கிஷோர்! இந்த வீட்டை இன்னும் சலிக்கணும். மறைவிடங்கள்ல ஏதாவது ஆயுதம் கிடைக்கலாம். நீங்க இந்த ரூமை சிரத்தையாக் கிளறிப் பாருங்க. நான் பக்கத்து ரூம்ல பார்க்கிறேன்'' — சொல்லிக் கொண்டே பக்கத்து அறைக்குள் நுழைந்தான்.

சமையலறை அது. காஸ் சிலிண்டர், அடுப்பு, பாத்திரங்கள், சின்னதாய் ஒரு டைனிங் டேபிள், மளிகைச்சாமான்கள் வைப்பதற்கான ஒரு சுவர் அலமாரி. சுவர் அலமாரிக்கு பூசப்பட்டிருந்த நீல நிற டிஸ்டெம்பர் பூச்சு.. மற்ற சுவர் பரப்புகளின் மேல் பூசப்பட்ட டிஸ்டெம்பர் பூச்சைக் காட்டிலும் அடர்த்தியாய்த் தெரிய, விவேக் அதை நோக்கிப் போனான்.

''தயாபாய்..!'' — குரல் கொடுக்க, அவர் உள்ளே வந்தார். விவேக் கேட்டான்.

''இந்த அலமாரி புதுசாக் கட்டினதா?''

''ஆ...ஆமா..''

''கட்டி எவ்வளவு நாளிருக்கும்?''

''ஆறு மாசம்.''

''கட்டும் போது நீங்க பக்கத்துல இருந்தீங்களா?''

''இல்ல! ஒரு ஃபிரண்டை பார்க்கிறதுக்காக... புனே போய்ட்டு ரெண்டு நாள் கழிச்சு வர்றதுக்குள்ளே பகதூர் இந்த அலமாரியை நிர்மாணம் பண்ணியிருந்தான்.''

''நீங்க எதுவும் கேக்கலையா?''

''கேட்டேன். அதுக்கு அவன், ரொம்ப நாளா இந்த மாதிரி அலமாரி ஒண்ணு கட்டணும்ன்னு நினைச்சிட்டிருந்தேன். தெரிஞ்ச கொத்தனார் ஒருத்தன் வந்தான். கட்டிட்டேன் என்றான்.''

விவேக் அலமாரியை நெருங்கி — அதைத் தட்டிப் பார்த்தான். அரைச் செங்கல் வைத்துக் கட்டிய அது திண்ணென்று இருந்தது. அலமாரியின் மேல் தட்டிலும் கீழ்த் தட்டிலும் இருந்த மளிகைச் சாமான் பாட்டில்களை எடுத்து ஓர் ஓரமாய் வைத்தான்.

இப்போது அலமாரியின் உட்பரப்பு வெறுமையாய்த் தெரிந்தது. விவேக் அந்தப் பரப்பை உற்றுப் பார்த்தான். இரண்டு சிமெண்ட் பலகைகள் இணைத்துச் சுவரை மூடியிருக்க அதன் இரண்டு பக்கங்களிலும், டிசைன் போட்ட மாதிரி இரண்டு அரை வட்டப் புடைப்புகள்.

விவேக் அந்த புடைப்புகளின் மேல் இரண்டு கைகளையும் வைத்து எதிரெதிராய் தள்ளினான். சில விநாடிகளின் தள்ளலுக்குப் பிறகு —

சிமெண்ட் பலகைகள் அசைந்தன. நகர்ந்தன.

(தொடரும்)

''நம் கால்நடை மருத்துவர் நகைச்சுவையா பேசறார்!''

''என்ன சொன்னார்?''

''எருமையைச் சோதனை பண்ணிட்டு 'இது மூணு மாதம் முழுகாம இருக்கு'ன்னார்...!''

— அ. தெய்வசிகாமணி.



''சென்னையில் ஏ.சி. தியேட்டர்கள் எத்தனை இருக்கு?''

''ஏ.சி. தியேட்டர்கள் நிறைய இருக்கு. ஏ.சி.யைப் போடும் தியேட்டர்கள் எத்தனை என்றுதான் தெரியவில்லை!''

— மோகன்.



''விளை நிலங்களையெல்லாம், பிளாட்டுகளாக்கி, இப்படி வீடுகள் கட்டிட்டால், உணவு உற்பத்தி எப்படிங்க நடக்கும்...?''

''அட... நீங்க ஏன் சார் கவலைப்படறீங்க...? வீட்டு வசதி வாரியம் கட்டுகிற வீடுகள்தானே...? கொஞ்ச நாளில், பழையபடியும் நிலங்களாகிடும்!''

— சுரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.



# என் புருஷன்தான் எனக்கு மட்டும்தான்

அடங்காப்பிடாரியான பெண்டாட்டி அப்பழுக்கில்லாத ஓர் ஆபீஸ் அபலையின் மேல் அபாண்டத்தை அள்ளித் தெளிக்க, அந்தப் பெண் தன் கறையைக் கழுவிக் கொள்ள என்ன பாடு படுகிறாள். அடங்காப் பிடாரீன்ய அடக்கி எப்படி வழிக்குக் கொண்டு வருகிறாள் என்பது கதை கதையாம்; அந்தப் பெண்ணிடம் உதவி பெற்று முன்னுக்கு வந்த கணவன் துணைபுரிவது காரணமாம்.

அடிதடிக்கு மிஞ்சிய அப்பழுக்கில்லாத குணச்சித்திரம் தமக்கு வரும் என்று மீண்டும் நிரூபித்திருக்கிறார் விஜயகாந்த். படித்த மனைவி அடுத் தடுத்துச் செய்யும் அவமரியாதைகளையெல்லாம் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தாங்கிக் கொள்ளும் சகிப்புத்தனத்திலும் சரி; காட்டுத்தனமாய்ப் பெண்டாட்டியை அடித்துப் போட்டதைப் பற்றி, அவள் வீட்டிலிருப்பவர் மடக்கிக் கேட்ட போது, தம் குழந்தையை இழுத்து வைத்து முதுகைக் காட்டி, 'உங்க பொண்ணை அடிச்சதுக்குக் கேட்க வந்துட்டீங்களே, என் பொண்ணை இப்படி அடிச்சிருக்காங்களே, என் மனசு என்ன பாடுபட்டிருக்கும்! இந்தக் கொழந்தை பொறந்ததிலேர்ந்து இதை ஒரு உபத்திரவமா நினைச்சு ஸ்கூல்ல சேர்க்கச் சொன்னாளே தவிர, இதுக்கு ஒருவேளை குளிப்பாட்டி விட்டிருப்பாளா, டிரெஸ் பண்ணி விட்டிருப்பாளா, பசியறிஞ்சு சோறூ ட்டி விட்டிருப்பாளா?' என்று பொருமும் போதும் சரி, போதிய ஆழம் காட்டியிருக்கிறார்.

அழகு ரேகா ஏறக்குறைய ஒரு வில்லியாய்ப் போனாலும் சிக்கென்று மனசுக்குள் உட்கார்ந்து கொள்கிறார். 'வாய்யா போய்யா' என்று ஆம்படையானை அந்த அளவுக்குத் தூக்கியெறிந்திருக்கக் கூடாது. படுக் கையில் புருஷனைப் பிடித்து வைத்துக் கொண்டு, கால் விரல் சுளுக்கிக் கொண்டதாய் மருந்து போடச் சொல்லி, விஜய் களிம்பு தடவ, கணுக்கால் வலி, கரண்டைக்கால் சுளுக்கு என்று ஏற்ற, விஜய் விழிப்படைந்து, 'இப்ப தொடை வலிக்குமே?' என்று கிண்டலாய்க் கேட்க, 'ஹூம்..' என்று அடிக்கண் பார்வையில் அணைப்பு விடும் கட்டத்தில் செமை கிளுகிளு தான். ஆக்ரோஷமாய்ப் படியேறி வந்த சுகாசினி, ரேகாவை அழைக்கும் போது மாடியில் மட்டுமல்ல; ஆணவத்திலும் உச்சத்திலிருந்து, 'என்னால் இறங்கி வர முடியாது. நீ என் புருசனை வளைச்சிப் போட்டுட்டே. இதை நான் ஊரறியச் சொல்வேன்', என்று சிலும்பிக் கொள்கிறாரே, கொடூரம்!



சுகாசினியிடம் எத்தனைக்கெத்தனை நாகரிகமெருகும் உத்தியோக கண்ணியமும் இருக்கிறதோ அத்தனைக்கத்தனை அழுத்தம்; லெவல் இறங்கி வரும் துணிச்சல்.

வி.கே.ஆர். மனசில் தங்கும் குணச்சித்திரம். 'என் பொண் டாட்டி பூலான் தேவி இருக்காளே அவள் பெத்த ரெண்டும் கூட அவளாட்டமே இருக்குதுங்க. என்ன மாப்ளே செய்றது?' என்று மாப்பிள்ளையிடம் ரகசிய அனுதாபம் காட்டுவது இதம்.

குட்டி சுஜியின் கூர்மையான மழலைச் சந்தேகங்களாகட்டும்; மருட்டு விழிப்பாகட்டும் நெஞ்சை நீவிக் கொடுக்கின்றன. க்ளை மாக்ஸில் அந்த மலைச் சரிவில் கயிற்றில் தொங்கியவாறு அது ஏறி இறங்கும் பரிதவிப்பு சரியான பக் பக்.

நீ இப்படி மடக்கினால் நான் அப்படி மடக்குகிறேன் பார் என்று சுறுசுறு தெறிக்கும் வசனங்கள் சூப்பர்.

ரொம்ப நாளைக்கப்புறம் — திரை அதிகம் தெரியும் திரை.

— பி.எஸ்.எஸ்.

# மேற்கிந்திய ஆட்டக்காரர்களை வீழ்த்துவேன்!



ராபின்சிங்



மேற்கிந்தியத் தீவுகளிலுள்ள டிரினா டுக்குச் சென்னை கிரிக்கெட் குழு ஒன்றுக் குத் தலைமை தாங்கி அழைத்துச் சென்று விளையாடிய அக்பர் இப்ராஹிம், தங்களை எதிர்த்து விளையாடிய மேற்கிந்திய அணி யிலிருந்த அந்த இளைஞரின் திறமையைக் கண்டு வியந்தார். ஆட்ட முடிவில், 'இந்தியா வுக்கு வந்தால் உங்கள் படிப்போடு கிரிக் கெட்டிலும் பிரகாசமான வாய்ப்புக் கிடைக் கும்' என்றார் அந்த இளைஞரிடம். அந்த இளைஞரும் வருவதாக ஒப்புக் கொண்டு வந்து விட்டார். இப்போது இந்தியப் பிரஜையாகவும் மாறி விட்டார்.

அந்த இளைஞர்தான் ராபின் சிங். அடுத்த மாதம் மேற்கிந்திய அணியோடு மோதப் போகும் நமது இந்திய அணியில் புதிதாகச் சேர்ந்திருக்கும் நால்வரில் ஒருவ ரான ராபின் சிங். கால் பந்தாட்டத்திலும் இவர் வல்லவர் என்றாலும் கிரிக்கெட் மேலுள்ள தீராத ஆர்வத்தால், பல சந்தர்ப் பங்களில் அந்தப் போட்டிகளில் கலந்து கொள்வதைத் தவிர்த்து விட்டார்.

''ரஞ்சி கோப்பைக்கான பந்தயத்தில் தமிழகக் குழுவின் சார்பாகப் பஞ்சாப் குழுவினை எதிர்த்து ஆடிய மாட்ச்தான் எனக்கு மறக்க முடியாத ஒன்று. அதில் 152 ரன்கள் எடுத்தது மகிழ்ச்சி தரும் விஷயம். அந்தப் பந்தயத்தின் இறுதியில் ரயில்வே அணியைத் தோற்கடித்துச் சாம்பியன் பட்டம் பெற்றாலும் கூட பஞ்சாப் அணியை எதிர்த்து ஆடிய ஆட்டத்தில்தான் என்னைப் பிறர் நன்றாகக் கவனிக்க ஆரம்பித்தனர்'' என்று சொல்லும் இவர், தமக்கு கிரிக்கெட் டில் மட்டுமல்ல; படிப்பிலும் ஆர்வம் உண்டு என்கிறார். சென்னை பச்சையப்பன் கல்லூரி யில் படித்துக் கொண்டிருக்கும் இவர் அடுத்த ஆண்டு, பொருளாதாரத்தில் முதுகலைப் பட்டம் பெறப் போகிறார்.

''சார் எனக்குப் பள்ளிக்கூட மாற்றத் தினால்தான் சர்வதேச அந்தஸ்து கிடைத் திருக்கிறது'' என்று ஒரு புதிர் போட்டா

வெங்கட்ரமணா.

எப்படி என்று நாம் புரியாமல் விழிக்க, அவரே தொடர்ந்தார்.

''நான் மதுரை கல்லூரி மேல்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போது, கூடைப் பந்தாட்டக்காரனாகத்தான் இருந்தேன். அந்தப் பள்ளியிலிருந்து டி.வி.எஸ். லக்ஷ்மி மேல்நிலைப் பள்ளிக்கு மாற வேண்டிய நிலை ஏற்பட்டது. அங்கு கூடைப் பந்தாட்டம் கிடையாது. கிரிக்கெட்தான் இருந்தது. எனவே, நானும் கிரிக்கெட்டிலேயே ஈடுபாடு கொள்ள வேண்டியதாயிற்று....'' என்று கடைசியில் அவரே புதிரை விடுவித்தார்.

பி.காம். பட்டதாரியான வெங்கட் ரமணா தமது சொந்த ஊரான மதுரையில்தான் கிரிக்கெட் ஆட்டத்தைத் தொடர்ந்து ஆடி வந்தார். மதுரையிலிருந்தவரைச் சென்னைக்குக் கொண்டு வந்து ஆட வைத்தவர் டி.வி.எஸ். நிறுவன அதிபர் தினேஷ்.

ராலே கம்பெனியில் பணிபுரிந்து ஓய்வு பெற்ற தம் தந்தைதான் தமது கிரிக்கெட் ஈடுபாட்டை வளர்த்தவர் என்று சொல்லும் வெங்கட்ரமணா, ''இந்தியக் கிரிக்கெட் குழு உலகக் கோப்பைப் பந்தயத்துக்குச் செல்வதற்கு முன் தமிழகக் குழுவுடன் சென்னையில் ஆடியது. அதில் நான் பந்து வீசிய போது 21 ரன்களில் ஐந்து விக்கெட்களை வீழ்த்தினேன். அப்போதுதான் கிரிக்கெட் தேர்வுக் குழுவினர் என் மீது தங்கள் பார்வையைச் செலுத்தினர். பிறகு நியூஸிலாந்துக்கு எதிராக ஆடிய ஒரு நாள் ஆட்டத்தில் முப்பத்தைந்து ரன்களுக்குள் இரண்டு விக்கெட்களை எடுத்தேன். அதனால்தான் எனக்குச் சர்வதேச நுழைவு கிடைத்தது!'' என்கிறார்.

''நீங்கள் எந்தப் பந்து வீச்சாளரைப் பின்பற்ற விரும்புகிறீர்கள்?'' என்ற போது, ''என் தன்னம்பிக்கைதான் எனக்கு குரு. அடுத்த மாதம் மேற்கிந்திய அணியோடு ஆடும் போது அந்த அணியின் தலைசிறந்த ஆட்டக்காரர்களை வீழ்த்தப் பாடுபடுவேன்...'' என்று மிகுந்த தன்னம்பிக்கையோடு கூறும் வெங்கட் ரமணாதான் சென்னை நகரை விட்டுத் தள்ளி மாவட்டப் பகுதியிலிருந்து வரும் முதல் தமிழக கிரிக்கெட் ஆட்டக்காரர்.

— குண்டுமணி.




இந்தியாவில் ஆஜ்மீர் என்ற இடத்தில் ஒரு ராக்ஷசப் பாத்திரம் உள்ளது. இதன் உயரம் பத்து அடி; அகலம் பன்னிரண்டு அடி. இதற்கான அடுப்பை ஒரு கல் கட்டடமாகக் கட்டியிருக்கிறார்கள். இதில் பன்னிரண்டாயிரம் பேர் சாப்பிடக் கூடிய அளவு உணவு தயாரிக்கலாம். நாலாயிரம் கிலோ அரிசிச் சாதம் சமைக்கலாம். அக்பர் சக்கரவர்த்தி சித்தூர் போரில் வெற்றியடைந்ததை முன்னிட்டு ஆஜ்மீர் தர்காவிற்கு இந்தப் பாத்திரத்தைப் பரிசளித்தாராம்! இந்தியாவிலேயே தற்போது உள்ள மிகப் பெரிய சமையல் பாத்திரம் இதுதான்!

—'தி வீக்'கிலிருந்து: எம். கே. நாராயணன்.



''என் கனவிலே தலைவி ஜெயலலிதா அடிக்கடி வர்றாங்க டாக்டர்...''

''அதனால என்ன கஷ்டம்? நீ மெய்யான தொண்டன்னு தெரியுது...''

''அது சரி, ஆனா, பூனைப்படையும் கூடவே வர்றதனால ஒரே பயமா இருக்கு...!''

— சா. கர்மராசன்.

நண்பன்: அரசியல்வாதியோட பொண்ணைக் கல்யாணம் செய்துக்கிட்டது தப்பாப் போச்சு.

மற்றவன்: ஏண்டா?

நண்பர்: சம்பந்தா, சம்பந்தம் இல்லாமல் முருங்கைக்காயையும், பாகற்காயையும் போட்டுக் கூட்டு வைக்கிறான்னாப் பார்த்துக்கோயேன்!

— சியாமளா.



## வட்டமேஜை

# "கலைஞரே சபாஷ் போடப் போகிறார்..."

* 'ஜெ — ஜா, இணைப்பு — ஜகஜ்ஜாலப் புரட்டு!' என்று தங்களால் தீட்டப்பட்டுள்ள தலையங்கம், எம்.ஜி.ஆரின் தொண்டர்களால் பரிசீலிக்க வேண்டிய ஒன்று. சுயநலத்திற்காகப் பிளவுபட்ட கட்சிகள், மீண்டும் அதே சுயநலத்திற்காக ஒன்று சேர்வது சகிக்க முடியாத ஒன்று. சிதறிய அ.தி.மு.க. தொண்டர்கள் சிந்தித்துச் செயல்பட வேண்டிய நேரம் இது.

சிதம்பரம், ஏ. எஸ். நடராஜ்.

* ஜெ — ஜா இணைப்பு பற்றிய இவ்வாரத் தலையங்கம் ஒருதலைப் பட்சமானது மட்டுமல்ல; கல்கியால் கூடச் சில சமயம் உண்மைகளை ஜீரணிக்க முடிவதில்லை என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. தேர்தல் முடிவுகளைக் கூர்ந்து கவனித்தால் பெரும்பாலான தொகுதிகளில், வெற்றி பெற்றுள்ள பிற கட்சியின் வோட்டுக்களை விட இவ்விரு அணிகளும் பெற்றுள்ள வோட்டுக்கள் அதிகம் என்பதுதான் நிதர்சன உண்மை!

சென்னை — 15. கு. கணேசன்.

* சிந்தனையைத் தூண்டும் கலந்துரையாடலை, இளம் மாணவிகளிடையே நிகழ்த்தி, அவர்களின் சிந்தனையைத் தூண்டியதன் மூலம், சமுதாயத்தில் ஒரு சில மாற்றங்கள் கண்டிப்பாக ஏற்பட வாய்ப்பு உண்டு. குறைந்த பட்சம் ஒரு சில பெண்களையாவது இது பாதிக்கும் என்று உறுதியாக நம்பலாம்.

திருச்சி — 21. உமா.

* சகோதரி உஷா குறிப்பிட்ட 'சமுதாயம் முழுமையும் மாற வேண்டும்' என்ற கருத்தை ஆழ விவாதிக்காமல், ஆண்கள்தான் இன்றைய பெண்களை இழிவு செய்யும் கொடுமைகளுக்கு முழுக் காரணம் என்ற தொனியில் விவாதம் சென்று விட்டதால் விவாதம் முழுமை பெறாமலேயே முடிந்து விட்டது.

ஜெயங்கொண்டம், மு.க.தி.க. பாலசுப்பிரமணியன்.

* கல்லூரி மாணவிகள் அலசிய விதவைகளின் பிரச்னைகள் தொடர்பாகச் சில சிந்தனைகள்... பெண்கள் முன்னேற்றத்துக்குச் சிறப்புத் திட்டங்கள் வகுக்கும் நமது அரசாங்கத்தின் கீழ் இயங்கும் தொலைக்காட்சிப் பிரிவும் சரி, திரைப்படங்களும் சரி, கணவனை இழந்த பெண்களை வெள்ளைப் புடைவை அணிந்து 'விதவைக் கோலம்' பூண்டவர்களாகவே சித்திரிக்கின்றன. முன்னேறிய சமுதாயத்தின் அடையாளங்களா இவை!? மேலும், பெண்களின் முன்னேற்றத்துக்குத் தடை ஆண்களே என்ற கருத்தை ஒப்புக் கொள்ள இயலவில்லை. 'சுமங்கலி'யாக இருந்த ஒரு பெண் தன் கணவனை இழந்து விட்டால், அவள் தாய் கூட அவளை எப்பொழுதும் போல் நடத்துவாளா என்பது சந்தேகமே.

சென்னை — 18. ராஜா.

* "பாலைவனத்தில் தொடங்கும் பயணம்" — தமிழக முதல்வராய்ப் பதவி ஏற்றுள்ள கலைஞர் கருணாநிதிக்கு ஏற்பட்டுள்ள சிக்கல்களையும் சோதனைகளையும் விளக்கியது. அதற்குத் தோதாகக் கலைஞர் சிந்தனையோடும் கவலையோடும் உள்ள படத்தை வெளியிட்டுள்ளது மிகப் பொருத்தமாக உள்ளது.

மதுரை — 7. எஸ். சங்கரநாராயணன்.

* "இன்று இறப்பு விழா" தொடர் கதையில், 15-வது அத்தியாயத்தில் "ஜகுவார்" விமானத்தைப் பற்றி, ராஜேஷ்குமார் எழுதியிருக்கிறார். ஜகுவார் இராணுவ விமானம் அல்ல. இந்திய விமானப் படையைச் சேர்ந்த போர் விமானம். விமானி மட்டுமே உட்கார்ந்து செலுத்தக் கூடிய, அதி வேக விமானம். நான்கைந்து பேர் உட்கார்ந்து பிரயாணம் செய்யக் கூடியது அல்ல.

பம்பாய், ஜே. எச். அலெக்ஸாண்டர்.

* குதிரைப் பந்தயங்களிலுள்ள குளறுபடிகள், தில்லுமுல்லுகள், கோல்மால்கள் ஆகியவற்றை நன்றாகவே படம் பிடித்துக் காட்டியுள்ளீர்கள். கலைஞர் கவனத்திற்கு அவற்றைக் கொண்டு வந்து, தீர்வு காணத் தக்க சமயத்தில் வெளியிட்ட தங்களின் பணி பாராட்டுக்குரியது.

புதுவை, நா. கிருஷ்ணவேலு.

* கல்கி 12.2.89 இதழில் "குதிரைப் பந்தயத்தில் கோல்மால்" என்ற கட்டுரையைப் படித்து வேதனையடைந்தேன். நான் மட்டுமின்றி என்னைப் போல ரேஸ் கோர்ஸில் வேலை பார்க்கும் சுமார் இரண்டாயிரம் தற்காலிக ஊழியர்களும், சுமார் ஆயிரம் நிரந்தர ஊழியர்களும் மற்றும் தவறாமல் ரேஸுக்கு வரும் பண்டர்களும் மிகவும் வேதனையடைந்திருப்பார்கள். நீங்கள் சொல்வது போல் ஒரு குறிப்பிட்ட நபரின் குதிரைகள், தான் வெற்றி பெறுகின்றன என்பதல்ல. அந்தக் குறிப்பிட்ட நபரின் குதிரைகள் மிக முக்கிய பந்தயங்களில் தோல்வியும் கண்டிருக்கின்றன. தவிர, குதிரைப் பந்தயம் என்பதே சூதாட்டம் தான். அதில் கோல்மால் என்று ஒரு சதமாவது இல்லாமலா இருக்கும்? எனவே தங்களது கட்டுரையால் நமது முதல்வர் குதிரைப் பந்தயத்தை அடியோடு ஒழித்து விட்டால் என்னைப் போன்றவர்களுக்கு உங்களது பத்திரிகை வேலை கொடுக்க முடியுமா? தற்போது புதியதாகப் பாதுகாவலர் நியமித்து உள்ளனர். கடந்த நான்கு பந்தய நாட்கள் மிக மிகச் சரியான முறையில் நடைபெற்று வருகின்றன.

சென்னை — 84, க. கார்த்திகேயன்.

* உண்மையிலேயே தன்னலமற்ற சமுதாயத் தொண்டு செய்து, எம்.எல்.ஏ.வாக ஆகியிருப்பது வியத்தகு செய்திதான். இன்றைய தி.மு.க. ஆட்சியில் இது போல் இன்னும் பல 'வரதராஜன்'கள் தோன்ற வேண்டும் என எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

கும்பகோணம், ஆர். ஸ்ரீதர்.

* புதிய முதல்வருக்குத் தராசுவின் யோசனை அபாரம்; அருமையான விளக்கம்.. கலைஞர் படித்து விட்டுத் தராசுக்கு சபாஷ் போடப் போகிறார்!

வலங்கைமான், வலங்கை ஜி. ராஜசேகர்.

* பிரதமர் ராஜீவ் காந்தியைப் 'பீரங்கி மாமா' என்று நையாண்டி செய்து எழுதப்பட்ட சிரிப்புத் துணுக்கைக் கல்கியில் படித்த போது மனம் வலித்தது. சில வாசகர்களின் உணர்வுகளைப் புண்படுத்தும் இது போன்றவற்றைத் தயவு செய்து தவிருங்கள்.

சென்னை — 88, பி. ஜி. நீலகண்டன்.

# அம்மாவைத் தேடி...

**வா**சல் கதவு தட்டப்படும் ஓசை. படுக்கையை விட்டு எழுந்து சென்று கதவைத் திறந்தேன்.

சூட்கேஸூம் கையுமாகச் சிவராஜ்! அவன் முகத்தைப் பார்த்தவுடனே பளிச் சென்று சொல்லி விட்டேன். ''நான் நேற்றே சந்தேகப்பட்டேன். என்னமோ தகராறு தான் என்று. வா, வா உள்ளே...'' என்று ஹாலிலிருந்த சோபாவில் உட்கார வைத்து, நானும் பக்கத்தில் உட்கார்ந்தேன்.

அவன் சுற்று முற்றும் ஒருமுறை பார்த்தான். சந்தேகத்துக்கு உள்ளேயும் போய் எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பி வந்த போது அவன் முகத்தில் ஏமாற்றம் கவிந்திருந்ததை நான் கவனிக்கத் தவறவில்லை.

அவன் என் முகத்தையே பார்த்தான். ''ஆமாம், தகராறு கிகராறுன்னு என்னமோ சொன்னியே. என்ன... என்ன தெரியும் உனக்கு?''

எனக்கே விவரம் அறிய ஆசை. நடந்த சமாசாரத்தை உடைத்துச் சொல்லி விட்டேன்.

''நேத்திக்கு ஆபீசில் ரிஸப்ஷனில் யாரோ ஓர் அம்மாள் என்னைப் பார்க்கக் காத்திருக்கிறதாப் பியூன் வந்து சொன்னான். போய்ப் பார்த்தால்... அம்மா! அவங்களைப் பார்க்க என்னமோ மாதிரி இருந்தது. திருத்தணி திருப்பதி எல்லாம் போயிட்டு இந்தப் பக்கமா வந்தேன்னாங்க. காலேஜ் பையன் மாதிரி ஒருத்தன் கூட்டி வந்திருந்தான். அம்மாவுக்குத் தெரிஞ்சவங்களாம். அவங்க ளண்டை என் ஆபீஸ் பேரைச் சொன்னதும் பையன் கூட்டி வந்தானாம்...''

''அப்புறம் அம்மா வேற என்ன சொன்னாங்க? இப்போ எங்கே அவங்க?''

''அதான் சொல்றேனே... எனக்கு நேத்திக்கின்னு பார், மென்னியை முறிக்கிற மாதிரி வேலை. நான் பையனைப் பிடிச்சு வீட்டுக்கு அனுப்பி வச்சேன். இவளுக்கும் போன் பண்ணிச் சொன்னேன்.''

''பின்னே இங்கே அம்மா வரவே இல்லையாமா?''

''வந்தாங்களாமே! இவளுக்கும் அம்மான்னா உயிராச்சே. வந்ததும் கலகலப்பாத்தான் பேசிட்டிருந்தாங்களாம். குழந்தையைக் கொஞ்சினாங்களாம். கொஞ்ச நேரம் இருந்துட்டுக் கிளம்பிட்டாங்களாம். இவளும் சாப்பிட்டுட்டுப் போகலாம்னு எவ்வளவோ சொல்லிப் பார்த்திருக்காள். 'அங்கே இன்னிக்குச் செய்யறாங்க; நாளைக்கு வந்துடறேன்'னு சொல்லிட்டுப் போயிட்டாங்களாம். ஆமாம், என்ன தகராறு?'' என்றேன்.

''உம்... இங்கேயும் ஏமாத்திட்டுப் போயிட்டாங்களா? சொன்ன மாதிரி அம்மா வர மாட்டாங்க'', என்று பெருமூச்சு விட்டான் சிவராஜ்.

அதற்குள் மங்களாவும் குளித்து விட்டு ஈரத் தலையில் டவலைச் சுற்றிக் கொண்டே வந்து சேர்ந்தாள். சிவராஜைக் கண்டதும், ''வாங்கண்ணா, எங்கே, அம்மா?'' என்று கேட்டாள் அப்பாவித்தனமாக.

அவன் போலியாகச் சிரித்து, ''நான் அம்மாவைக் கூட்டிட்டுப் போகலாம்னு வந்திருக்கேன். நீங்க விட்டுட்டீங்களே!'' என்றான்.

அவள் என்னையும் அவனையும் ஒரு கணம் மாறி மாறிப் பார்த்தாள். பிறகு புரிந்து கொண்டு, ''என்ன, வழக்கமான சமாசாரம்தானே? வயதான காலத்தில் இவங்களுக்கு ஏன் இப்படி... உங்களுக்கு ஒருத்தி வந்து அவளோட சண்டை பிடிச்சிட்டுக் கிளம்பினாலும் பரவாயில்லை. இருக்கிறது ஒரே பெண். அதுவும் பாவம், பாழ் நெத்தியோடு கிடக்குது. அதனோடு முறுக்கிக்கிட்டு இப்படி வந்துடறாங்களே! முன்ன கூட ஒரு வாட்டி இப்படி வந்துடலை?'' என்று அவனுக்கு ஆறுதலாகப் பேசினாள்.

''ஆமா இப்பத்தான் உனக்கு ஞானமும் உதயமாகுது. வந்தவங்களைப் பிடிச்சு வைக்கத் தெரியலை. அவங்களைப் பார்த்ததும் உனக்குச் சந்தேகம் வரலையா?'' எனக்கு அவள் மேல் எரிச்சல்தான்.

''என்னை என்ன பண்ணச் சொல்றீங்க? அவங்க என்ன சின்னக் குழந்தையா? நீங்களே சொல்லுங்கண்ணா. அந்தப் பையனையும் கூடவே வச்சுக்கிட்டுப் போய்த்தான் ஆகணும்னு ஒத்தைக் காலிலே நின்னா நான் என்ன பண்ண முடியும்?'' என்று சிவராஜிடமே சிபாரிசுக்குப் போனாள்.

''தொலையுது. அந்தப் பையன் வீடு, எங்கேன்னாவது கேட்டு வச்சிட்டியா?'' என்று கேட்டேன்.

''வந்து... என்னமோ சொன்னானே...'' என்று கையைப் பிசைந்து கொண்டாள். ''அவன் ஏதோ காலேஜ்லே படிக்கிறானாம். நம்ம மருந்துக் கடைக்காரர் பையன் சீனு இல்லை, அவனைக் கூடத் தெரியும்னான்.''

''எந்த மருந்துக் கடைக்காரர்? எந்தச் சீனு?''

**புனிதன்**

''முன்னே நாம குடியிருந்த வீட்டுக்குப் பக்கத்திலே இருந்தாரே சீனு... அந்தப் பையன் கூட மெடிக்கலுக்குப் படிக்கலை?''

''ஆமாம்... அவங்கதான் இப்போ ஆதியப்பன் தெருவுக்குப் போயிட்டாங்களே!''

அவளுக்கு உற்சாகம் பிறந்தது. ''அதே தான். அதே தெருன்னுதான் சொன்னான். மூணாவது வீடாம்.''

''பையன் பேர்?''

''கேட்கலையே. அவங்க அக்காவுக்குக் கூடக் கடலூர்தானாம். அந்தப் பெண்ணோட புருஷன் கூட ஆறு மாசத்துக்கு முன்னால் ஒரு லாரி ஆக்ஸிடெண்டில் போயிட்டானாம் பாவம்! அம்மாதான் சொன்னாங்க.''

அவள் சொல்லச் சொல்லச் சிவராஜின் முகம் மலர்ந்தது. ''ஓ ஜலஜாவா? தெரியும் தெரியும். கடலூரில் நம்ம வீட்டுக்கு எதிர் வீடு. பழக்கமுண்டு. நேரே போனா பிடிச்சிடலாம்'' என்றான்.

சிவராஜும் நானும் கடலூரில் ஒன்றாய்ப் படித்தவர்கள். எப்போதும் அவர்கள் வீட்டில்தான் குடியிருப்பேன். சிவராஜின் அம்மா ரொம்பக் கெட்டிக்காரர். விதவையான அந்த அம்மாள் சொந்தத்தில் மெஸ் நடத்தினார்.

ஒரே பையன். ஒரே பெண்தான். பெண்ணையும் சொந்தத்தில் கட்டிக் கொடுத்து, மாப்பிள்ளையை வீட்டோடு வைத்துக் கொண்டிருந்தார்கள். மஞ்சள் காமாலை மாப்பிள்ளையைச் சுருட்டிக் கொண்டு போய் விட்டது.

இப்போது பெண்ணும் அவரும்தான் கடை நடத்துகிறார்கள். சிவராஜ் கௌரவமான பள்ளிக்கூட வாத்தியார். இரண்டு வருஷங்களுக்கு முன்னால் சைதாப்பேட்டையில் ஆசிரியர் பயிற்சிக்கு வந்த போது என்னை வந்து எப்போதாவது பார்ப்பான். இப்போது சிதம்பரத்தில் உத்தியோகமாம்.

வீட்டில் அக்காவுக்கும் அம்மாவுக்கும் மனஸ்தாபம் வருவதற்குக் காரணமே சிவராஜ்தான். சிவராஜைக் கண்டபடி அம்மா திட்டுவார். தம்பியை ஏன் திட்டுகிறீர்கள் என்று அக்கா பரிவார். அப்புறம் சண்டைதான்.

இப்போதும் அதுதான் காரணமாம். சிவராஜுக்கு வந்திருந்த ஏதோ ஒரு கடிதத்தைப் பார்த்து விட்டு அம்மா திட்டினார்களாம். அக்கா குறுக்கிட்ட போது முறுக்கிக்கொண்டு கிளம்பி விட்டார்களாம்.

சண்டை பிடிக்கிற மாதிரி கடிதத்தில் என்ன விஷயம் இருந்தது என்று கேட்டேன். அது தனக்கே தெரியாது என்று சொல்லி விட்டான்.

ஆதியப்பன் தெருவை நோக்கிச் சென்று கொண்டிருந்த போது சிவராஜ் சொன்னான்: ''அம்மா எதுக்காக இங்கே வந்திருக்காங்க தெரியுமா? நான் அவங்களைப் பத்தி அக்கறையா விசாரிச்சி உனக்கு ஏதும் எழுதியிருக்கேனான்னு தெரிஞ்சிக்கத்தான்'' என்று சொன்னான்.

''எழுதறதுதானே பின்னே?'' என்றேன்.

''உனக்குத் தெரியாது. எழுதினா அம்மா





ஒருவர்: என் பையன் கல்யாணமே வேண்டாம் என்கிறான்.

மற்றவர்: இப்போ அப்படித்தான் சொல்வான். அவன் எவளைக் கட்டிக் கொள்ளக்கூடாதுன்னு நீங்க நினைப் பீங்களோ அவளைக் கண்டுவிட்டால் போதும், 'கல்யாணம் செய்து வை' என்பான்!

— ஆர். ஆர். பூபதி.

போயிட்டா, அம்மா போயிட்டான்னு ஊர் முழுக்கத் தம்பட்டம் அடிச்சியான்னு கோச் சுக்குவாங்க. எழுதலைன்னா கொஞ்சமாவது அக்கறை இருக்கான்னு கோச்சுக்குவாங்க. நெருக்காப் போய்ப் பிடிச்சிட்டாச் சரி பண்ணிடலாம்'' என்றான்.

எனக்கு அவன் தர்மசங்கடத்தைப் பார்க் கப் பரிதாபமாயிருந்தது.

மங்களா சொன்னபடி ஆதியப்பன் தெரு வில் கிழக்குப் பக்கம் இருந்த மூன்றாவது வீடுகள் இரண்டிலும் விசாரித்தோம். துப்புக் கிடைக்கவில்லை. மேற்குப் பக்கமும் கேட் டோம். அப்படி ஒருத்தரும் இல்லை என்று சொல்லி விட்டார்கள்.

எனக்குத் தெரிந்த மருந்துக் கடைக்காரர் வீட்டில் போய், "இந்தத் தெருவில் ஆறு மாசத்துக்கு முன்னாடி லாரி ஆக்ஸிடெண் டில் யாராவது போயிட்டாங்களா? அவருக்கு ஜலஜான்னு பெண்டாட்டியும் இரண்டு பிள்ளைகளும் உண்டு, தெரி யுமா?'' என்று கேட்டேன்.

அந்த அம்மாள் பாவம் ரொம்ப நேரம் யோசித்து விட்டு எனக்காக அக்கம் பக்கத் திலும் போய் விசாரித்து விட்டு வந்து, "கிட்டத்தட்ட ஒன்பது மாசத்துக்கு முன் னாடி ஒரு தொண்ணூறு வயதுக் கிழவர் ஒருத்தர்தான் இங்கே செத்துப் போனார். வேறு யாரும் சாகலையே?'' என்று வருத் தம் தெரிவித்தார்கள்.

இனி எந்தத் திசையில் போய் எப்படி சிவராஜின் அம்மாவைப் பற்றித் தெரிந்து கொள்ளப் போகிறேன்?

காலையில் பேருக்கு ஒரு காப்பியுடன் புறப்பட்டவர்கள்தான். உச்சி வெயில் சுள் ளென்று உறைத்தது. அதே ஆதியப்பன் தெருவில் பாரா கொடுத்துக் கொண்டிருப் பது இது எத்தனாவது முறையோ!

கிழக் கோடியிலிருந்து திரும்பும் போது யாரோ, "சிவராஜ்!" என்று அழைக்கும் ஒலி கேட்டது.

தெய்வமே அழைப்பதைப் போன்ற தொரு சிலிர்ப்பு ஏற்பட்டது எனக்கு. அந்த ஒரு கணத்தில், 'ஆண்டவனே! சிவராஜ் என்று உலகத்தில் இந்த ஒருத்தனைத் தவிர வேறு எவருக்கும் பெயர் இருந்து விடக் கூடாது' என்று வேண்டிக் கொண்டேன்.

சிவராஜ் திரும்பினான். அவன் முகத் தையே நான் கவனித்தேன். அது மலர்ந்தது. "கமலம்மா, நீங்க இங்கயா இருக்கீங்க?'' என்று கேட்டுக் கொண்டே என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அவர்களுக்குப் பின்னால் அந்த முன்பின் தெரியாத வீட்டி னுள் நுழைந்தான்.

ஒண்டுக் குடித்தனங்கள் நிறைந்த அந்த வீட்டின் கடைசிப் போர்ஷன் பக்கம் அடி யெடுத்து வைத்த போது, என் நெஞ்சில் இனிப்புச் சுரந்தது. நேற்று சிவராஜின் அம்மாவோடு வந்திருந்த அந்தக் கல்லூரி மாணவன் டிரான்ஸிஸ்டரைத் திருகிக் கொண்டிருந்தான். என்னைக் கண்டதும் ஓர் அறிமுகப் புன்னகை உதிர்த்தான்.

"நீதானேப்பா நேத்து வந்தவன்?'' என்று கேட்டு, அவன் 'ஆமாம்' என்று தலையசைத் ததைச் சிவராஜிடம் சுட்டிக் காட்டிய போது, என் தோளிலிருந்து பெரும் சுமையை இறக்கி வைத்து விட்ட நிம்மதி பிறந்தது உள்ளத்தில்.

சிவராஜ் சுற்று முற்றும் ஒருமுறை பார்த்து விட்டு, "ஜலஜா வீட்டில் அம்மா இருக்கிற தாய்ச் சொன்னாங்க. ஜலஜாவும் இங்கே தான் இருக்குதா?'' என்று கேட்டான்.

"அதை ஏன் கேட்கிறே போ'', என்று அலுத்துக் கொண்டாள் அந்த அம்மாள். "ஜலஜா பெரியமேட்டில் இருக்கு. அம்மா அதுகூடத்தான் வந்தது. இருந்து சாப்பிட் டுப் போகலாம்னு எவ்வளவோ சொன் னேன். இன்னொரு நாள் வரேன்னு புறப் பட்டுப் போயிட்டாங்க...''

ஜலஜாவுக்கு இந்த அம்மாள் ஏதோ சொந்தம். கடலூரில் ஜலஜாவைப் பார்க்க வந்த போது சிவராஜுக்கு அறிமுகம். தெருப் பக்கம் தற்செயலாக—என் பிரார்த் தனையின் வலுவால் கூட இருக்கலாம்—வந்த போது சிவராஜை அடையாளம் கண்டு கொண்டு அழைத்திருக்கிறார்.

"போயிட்டாங்கன்னா... ஜலஜாவோட தானே?'' என்று பதற்றத்துடன் கேட்டான் சிவராஜ்.

"ஆமாம். இன்னிக்கே ஊருக்குப் போக ணும்னு கூடச் சொல்லிட்டிருந்தாங்க. இதோ அவர் கூட வந்துடுவார். அவரைக் கேட்டால் எல்லாம் தெரியும்.''

நான் சிவராஜின் காதைக் கடித்தேன். "சிவராஜ், இப்போதைக்கு அந்த ஜலஜா வீட்டு விலாசம் மட்டும் கேட்டு வை. போதும். இதோ போய் ஆட்டோ பிடிச்சிட்டு வந்துடறேன்" என்று நான் வெளியிலேயே வந்து விட்டேன்.

மெயின் ரோட்டுக்கு வந்து, நான் ஆட்டோ பிடித்துக் கொண்டு திரும்பிய போது, அந்த வீட்டு வாசலில் அதே பையனுடன் சிவராஜ் காத்துக் கொண்டிருந்தான். அந்த அம்மாளிடம் விடை பெற்றுக் கொண்டு இருவரும் ஆட்டோவில் என்னுடன் ஏறிக் கொண்டார்கள்.

"என்ன விலாசம்?" என்றேன்.

"பெரியமேட்டுக்குப் போகச் சொல்" என்றான்.

"விலாசம்?"

"அந்தத் தெருப் பெயர் வீட்டு நம்பர் எல்லாம் தெரியாதாம். ஆனால் பையன் அந்த வீட்டை அடையாளம் காட்டுவதாய்ச் சொன்னான்."

"கோரிப் பக்கம்" என்றான் பையன்.

எந்தக் கோரி என்று தீர்மானிக்க அரை மணி. மெயின் ரோட்டை வெட்டும் எந்தச் சந்து என்று தீர்மானிக்க முக்கால் மணி. தாழ்ந்த வீட்டில் எந்த வீடு என்று கண்டு பிடிக்கக் கால் மணி. விட்டோமா? சரியாக நாலு மணிக்கு ஜலஜாவின் வீட்டை அடைந்தோம்.

கூண்டிப்பாய் வீட்டுக்குள் அம்மா இருக்கிறார்கள் என்று எனக்குள் ஓர் அசைக்க முடியாத நம்பிக்கை. நானே முன்னால் நுழைந்து, "அம்மா, அம்மா!" என்று குரல் கொடுத்தேன்.

பையன் என்னை முந்திக் கொண்டு வீட்டினுள் நுழைந்து விட்டான். நாங்கள் தயங்கியபடி வெளியிலேயே நின்றோம்.

"சிவராஜ்! உள்ளே வா. ஏன் அங்கேயே நிற்கிறே?" என்று கனிவோடு வரவேற்றாள் ஓர் இளம் பெண்.

கூர்ந்து பார்த்த போதுதான் சிவராஜ் குறிப்பிட்ட ஜலஜா அவளாகத்தான் இருக்க வேண்டும் என்று பட்டது. மங்கலமின்றி இருந்தாள். பாவம், தகப்பனை இழந்த இரு குழந்தைகளுக்குத் தாய்.

"அம்மா இருக்காங்க இல்லையா?" என்றுதான் முதலில் கேட்டான் சிவராஜ்.

"அம்மா ஆஸ்பத்திரி வரை போயிருக்காங்க...." என்று ஜலஜா சொல்லி வாய் மூடு முன்பே பதறிப் போனான் சிவராஜ்.

"ஆஸ்பத்திரிக்கா? எந்த ஆஸ்பத்திரிக்கு? அம்மாவுக்கு என்ன?"

"அம்மாவுக்கு உடம்புக்கு ஏதாவதுன்னா அவரை மாத்திரம் அனுப்பிட்டு நாங்க இங்கே இருப்போமா தம்பி? அங்கே தெரிஞ்சவர் ஒருத்தரைப் பார்த்துட்டு வர்றதுக்காகப் போயிருக்காங்க. வந்துடுவார். தம்பி, இவங்களை அழைச்சிட்டுப் போய் முன் அறையில் உட்கார வையேன்" என்று எங்களை அழைத்து வந்த பையனிடம் மீண்டும் சொன்னாள் ஜலஜா.

முன் அறை சற்றே இருட்டாக இருந்தது. பையன் விளக்கைப் போட்டான். மின் விசிறியைச் சுழல விட்டான்.

அந்த அறை படுக்கை அறையைப் போலிருந்தது. சுவர்களில் குடும்பப் படங்கள் பல மாட்டியிருந்தன. குழந்தைப் படம், குமரிப் படம், வளைகாப்புப் படம், குரூப் போட்டோ. அம்மா இங்கே இருக்கிறார்கள் என்று அறிந்து கொண்டு விட்ட நிம்மதியில் படபடப்புச் சற்றே அடங்கிய மனநிலையில் அந்தப் படங்களையெல்லாம் பார்த்துக் கொண்டு வந்தான் சிவராஜ்.

குரூப் போட்டோ ஒன்றைச் சுட்டிக் காட்டி, "இதோ பார், ஜலஜாவுக்குக் கல்யாணமான புதிதில் எடுத்தது இது. இதோ அம்மா. இங்கே நான். அக்கா இதோ" என்று கூறி மகிழ்ந்தான்.

எதிர்ப் பக்கம் தனியாக மாட்டப்பட்டிருந்த ஒரு படத்தின் மேல் அவன் பார்வை அடிக்கடி தாவுவதையும் ஆனால் அதைப் பற்றி அவன் அந்தப் பையனிடம் எதுவும் கேட்காததையும் நான் ஜாடையாகக் கவனித்தேன்.

ஜலஜா பலகாரத் தட்டும் காப்பியும் எடுத்துக் கொண்டு வந்து வைத்த போது அவற்றைத் தொட்டுக் கூடப் பார்க்காமல், "ஜலஜா, நான் வந்து போனேன்னு அம்மாகிட்ட சொல்லு. அம்மா இல்லாததால் அக்கா ரொம்பக் கவலையாய் அழுதுகிட்டிருக்குதுன்னு சொல்லு. நான் இன்னொரு வாட்டி வரேன்" என்று கிளம்ப யத்தனித்தான்.

எனக்கு வந்த ஆத்திரத்தில் அவனை நார் நாராய்க் கிழித்து விட வேண்டும் போலிருந்தது. காலையிலிருந்து அலைந்த அலைச்சலென்ன, பட்ட பாடென்ன, கடைசியில்

---

"சாப்பிடும்போது மென்று கொண்டே 101, 102—ன்னு எண்ணுறீங்களே.... ஏன்?"

"ஒவ்வொரு வேளைச் சாப்பாட்டின் போதும் சாப்பாட்டில் இருக்கிற கற்களை எண்ணுவது என் வழக்கம்!"

— போடி. ப்ரியபாரதி.



அம்மாவைப் பார்க்கப் போகும் நேரத்தில் இவன் பேசுகிற பேச்சென்ன?

"சிவராஜ்! இடியட்! உனக்கென்ன பைத்தியமா? அம்மாவைப் பார்த்துக் கூட்டிப் போகாம நாம் மாத்திரம் போறதா?"

"அம்மா எங்கேயும் போக மாட்டாங்க. தன்னால வருவாங்க. நான் வரேன்."

"அந்த ஞானம் இப்போது வந்திருக்கக் கூடாது. ஊரை விட்டுப் புறப்படறப்ப உதிக்காத ஞானம் திடீர்னு இப்ப எப்படிடா முளைச்சது?"

ஜலஜா எங்கோ பார்த்தபடி சொன்னாள். "ஒருவேளை, இந்த ரூமில்தான் போதி மரம் இருக்குதோ என்னவோ?" அவள் பேச்சில் கேலிப் பூச்சுத் தெரிந்தது.

எரித்து விடுகிற மாதிரி அந்தப் பெண்ணை முறைத்துப் பார்த்தான் சிவராஜ். "நீ வந்தால் வா. வராவிட்டால் கிட. எல்லோரும் சேர்ந்தா சதி செய்றீங்க? அதெல்லாம் என்கிட்ட ஒண்ணும் நடக்காது" என்று சற்று உரக்கவே கத்தி விட்டு வெளியேற முயன்றான்.

"அதெப்படி நடக்காமல் போகுதோ பார்க்கிறேன்" என்றுவழிமறித்துக்கொண்டு நிற்பது யார்?

அம்மாதான்!

"அம்மா, நீங்க இந்த விஷயத்தில் தலை யிடாதீங்க. உங்களுக்கு ஒண்ணும் தெரியாது", என்றான் சிவராஜ்.

"எனக்கா ஒண்ணும் தெரியாது? நான் உன்னைப் பெத்தவடா" என்று சொல்லி அவனை இழுத்து வந்து என் பக்கத்தில் உட்கார வைத்து விட்டு, எட்டிப் பார்த்து, "மாலினி, நீ ஏன் பயப்படறே? வா இப்படி. இவன் கிடக்கிறான். இதோ இந்தத் தம்பியிடமே நியாயம் கேட்கலாம்" என்றார்கள்.

தயங்கித் தயங்கி எதிரில் வந்து தலை குனிந்து நின்றாள் ஒரு பெண். நான் பின்புறமிருந்த புகைப்படத்தைப் பார்த்தேன். சந்தேகமில்லை. அந்தப் படத்திலிருந்தவள் அதே பெண்தான்.

"கேளப்பா, உன் சினேகிதனுடைய யோக்கியதையை..." என்று ஆரம்பித்தார்கள் அம்மா. "மாலினிக்குச் சொந்த ஊர் சிதம்பரம். இவன் அங்கு இருந்த போது இதோ இந்த யோக்கியன் அங்கதானே வாத்தியாராய் இருக்கான்? இவள் இருந்த வீட்டில்தான் குடியிருந்திருக்கான். இருவருக்கும் சிநேகம். இந்தப் பாவி இவனை நம்பிட்டாள். எப்படி எப்படியோ ஆயிட்டது. இவளும் இங்கே வந்துட்டாள் நர்ஸ் படிப்புக்காக. அப்புறம் எத்தனையோ கடிதாக போட்டிருக்காள். இந்தத் துஷ்யந்த மகாராஜாதன்னைமறந்துடும்படியாஎழுதிட்டார். எப்படியிருக்கு கதை? கடைசியிலே எனக்கு எழுதிட்டாள். அந்தக் கடிதம் விஷயமாத்தான் எனக்கும் இவன் அக்காவுக்கும் சண்டை. இந்த யோக்கியமான தம்பிக்குப் பரிஞ்சிட்டு அவள் பேசினால் என்னாலே சும்மா இருக்க முடியுமா? எப்படியும் இந்தப் பெண்ணைத் தேடிப் பிடிச்சி, இவளைப் பத்தியும் விசாரிச்சுத் தெரிஞ்சிக்கிட்டு ஏதாவது ஒரு வழி பண்ணணும்னுதான் புறப்பட்டு வந்தேன். கடிதாசில் இவள் விலாசம் எழுதலை. எங்கே தங்கியிருக்காள்னு முதல்லே எனக்குத் தெரியலை. அதனால்தான் இவன் நெருக்கமா பழகிய இடங்களுக்கெல்லாம் போய் விசாரிச்சேன் ஏதாவது துப்புக் கிடைக்குமான்னு. அவங்களண்டை என் மகன் இப்படி இப்படிச் செய்துட்டான்னு நேருக்கு நேர் எப்படிச் சொல்வேன்? இங்கே வந்தப்பதான் ஜலஜாவுக்கு இந்தப் பெண் உயிர்ச் சினேகிதின்னு தெரிஞ்சுது. ஜலஜாவண்டை தன் கதையைச் சொல்லியிருக்காள் இந்தப் பெண். அப்பக் கூட இந்த யோக்கியன் பேரைச் சொல்லலை. நான் வந்த காரணத்தை ஜலஜா துருவித் துருவிக் கேட்டப்ப நான் உடைஞ்சி போயிட்டேன். எல்லா விஷயத்தையும் கொட்டிட்டேன். கடிதாசையும் காட்டிட்டேன். பார்த்ததும்தான், 'ஐயோ, இது எங்க மாலினியாச்சே!'ன்னு ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போனாள். ஜலஜாவுக்குச் சினேகிதின்னா அவள் பத்தரை மாத்துத் தங்கமாத்தான் இருக்கும்னு என் மனசுக்குப் பட்டுப் போச்சு. விசாரிச்சதிலே அது நிஜமாவும் போச்சு. நீயே பார், இவளை என் மருமகளா ஏத்துக்கிட்டா நீ என்னை மதிக்காமல் போயிடுவியா? இல்லே, இவள் கழுத்திலே இவன் தாலி கட்டினா இவனுடைய சினேகிதத்தை முறிச்சிக்குவியா? சொல்லப்பா. நீயே சொல்!"

அம்மாவின் கண்களில் நீர் ததும்பியது.

"இழுத்த இழுப்புக்கு வருகிற பெண் குடும்பத்துக்குச் சரிப்பட்டு வருமான்னு சந்தேகிச்சிருக்கிறான்." என் சந்தேகத்தையே அவனுடைய சந்தேகமாக்கி அம்மாவிடம் ரகசியமாகக் கேட்டேன் நான்.

"அப்படிப்பட்டவளாய் இருந்தா இவனையே ஏன் தொங்கிக்கிட்டிருக்கிறாள்? புருஷன் போனப்புறம் வசதியோடு பிறந்த வீட்டிலிருக்க வழியிருந்தாலும் தாலி கட்டினவன் வீடே சாசுவதம்னு ஒண்டுக் குடித்தனத்திலே இருக்காளே ஜலஜா, அந்த வழி வந்தவள் மாலினி. இவள் குடும்பத்துக்கு லாயக்கா இல்லையாங்கறதைத் தீர்மானிக்க அம்மாக்காரி நான் இருக்கேன். இவனுக்கு ஏன் அந்தக் கவலை? நான் கீறின கோட்டைத் தாண்டாதவன் என் பிள்ளைன்னு நான் இதுவரை பெருமைப்பட்டது உண்மையானால் இப்போ இவன் என்னை எதிர்த்து ஒண்ணும் சொல்லக் கூடாது. அப்படி இவன் எதிர்க்கிறதாய் இருந்தா என்னை எதுக்காகவும் எதிர்பார்க்காம இங்கேருந்து போயிடட்டும்."

அம்மா தீர்மானமாகச் சொல்லி விட்டாள். நான் சிவராஜையே பார்த்தேன்.

"இல்லேம்மா. நீங்க சொல்றபடியே செய்றேன்" என்று அடக்கமாகக் கூறினான், அந்த அம்மா பிள்ளை.

எதற்காகவோ என்னை நன்றியோடு நோக்கினாள் மாலினி என்ற அந்தப் பெண்.

7

ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI

ராஜ்மோகன் காந்தி

# அன்பின் அடிப்படையில் எதிர்ப்பு!

நேரு தமது கொள்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டுமென்றால் அதற்கு ஒரே வழி, பொது ஜனக் கருத்தை வலிமை பெறச் செய்வதுதான் என்று ஸி.ஆர். நம்பினார். ஓராண்டுக்கு முன்னதாகவே நேரு, ஆட்சி மொழிப் பிரச்னை தொடர்பாக ஸி. ஆர். ஒரு பனிப்போர் நடத்துவதாகப் பகிரங்கமாகக் கூறி வருத்தப்பட்டிருந்தார். அப்போது ராஜாஜி பின்வருமாறு நேருவுக்குக் கடிதம் எழுதினார்:

"நீங்கள் சொன்னதை நாளிதழ்களில் படிக்க எனக்கு மிகுந்த மனவேதனை உண்டாயிற்று. வேதனை எதனால் என்றால், நீங்கள் வருத்தப்படுகிற மாதிரி நான் நடந்து கொள்ள நேர்ந்ததே என்பதால்தான். ஆனால் என்ன செய்ய? ஓர் அண்ணன் நிலையில் இருந்து உங்களை எச்சரிக்க வேண்டியது என் கடமை. இந்தக் கடமையைச் செய்வதாகப் பத்தாண்டுகளுக்கு முன்பாக, நாடு சுதந்திரம் பெற்ற போது நான் உறுதி எடுத்துக் கொண்டேன். உங்கள் அன்பை நான் உணர்கிறேன். உங்களிடம் எனது பாசமும் மாறவில்லை என்று உறுதி அளிக்கிறேன்.

"ஆனால் சமீப காலமாக எனது அறிவுரைகளை நீங்கள் மதிப்பதில்லை என்பதைக் கண்டு வருகிறேன். நீங்கள் பொது ஜன அபிப்பிராயத்துக்குத்தான் வளைந்து கொடுக்கிறீர்கள் என்பதைப் பார்க்கிறேன். இன்னும் சொல்லப் போனால் உங்களது ஆழ்ந்த நம்பிக்கைகளைக் கூட, நீங்கள் பொது ஜனக் கருத்தின் அழுத்தத்துக்குக் கட்டுப்பட்டு விட்டுக் கொடுக்கிறீர்கள். உங்களுக்கு அந்தரங்கமாகக் கடிதம் எழுதிப் பயனில்லை என்று காண்கிறேன். பொது மக்கள் மூலமாக ஓர் இயக்கம் நடத்தித்தான் உங்களை அசைக்க முடியும் என்று நான் உணர்வதால் அதைச் செய்தே ஆக வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறேன். அதனால்தான் நீங்கள் குறிப்பிடுகிற இந்தப் 'பனிப்போர்' நடந்து கொண்டிருக்கிறது."

ஜவாஹர்லால் இதன் பிறகு இரண்டு முறை ஸி. ஆருக்கு எழுதினார். முதல் கடிதத்தில், ஸி. ஆருடைய அணுகுமுறை, ஒரு விவாதத்தின் மூலம் நம்பிக்கை பிறக்கச் செய்வதற்குப் பதிலாக, பலவந்தத்தின் மூலம் ஒப்புக் கொள்ள வைப்பதாக உள்ளது



* "தேசத்தை ஆள்கின்ற நிலையில் உள்ள ஒருவருக்குச் சுதந்திரமான, அச்சமற்ற ஆலோசனையை விட முக்கியமானது வேறு ஒன்றும் கிடையாது."

என்று குறைப்பட்டுக் கொண்டார். ஆனால் தமது இரண்டாவது கடிதத்தில், ஸி. ஆரும் மற்றும் பலரும் செய்த கடுமையான விமர்சனங்கள்தாம், ஆட்சி மொழிக் கொள்கையைக் காங்கிரஸ் மாற்றிக் கொள்ளக் காரணமாயிருந்தன என்பதைச் சுற்றி வளைத்தேனும் ஒப்புக் கொண்டிருந்தார்.

எது எப்படியானாலும், நேருவிடம் ஸி. ஆருக்கு இருந்த அன்பு என்றைக்குமே மாறவில்லை. கடந்த சில ஆண்டுகளாகவே ஸி.ஆர்., தமது படுக்கைக்குப் பக்கத்தில் ஒரு

● விருதுநகர் அருகேயுள்ள சில ஊர்களின் பெயர்கள்: முத்தம்பட்டி, நிறைமதி, நமஸ்கரித்தான் பட்டி, மண்ணுக்குள்ளிருந்து மீண்டான் பட்டி, தாலிக்குளத்துப் பட்டி.

— விருதை ராஜா.

பிறையில், தாமும் நேருவும் சேர்ந்திருப்பது போன்ற ஒரு சிறிய புகைப்படத்தைச் சட்டம் போட்டு வைத்திருந்தார். சுதந்திரக் கட்சி உருவானதால் இந்தப் படம் நீக்கப்படவில்லை. ஸி.ஆரின் மரணம் சம்பவிக்கும் வரை, அந்தப் படம் இடம் மாறவேயில்லை!

'முதிர்ந்த ராஜதந்திரியான ஸி. ஆர்., நம்பிக்கைகளைக் குலைக்கிறவராக, மரியாதைக்குரிய உருவங்களை உடைக்கிறவராக உருமாறி விட்டார்' என்று சிலர் குற்றம் சாட்டினார்கள். "பற்றற்ற ஞானியாக வாழப் போகிறார் என்று எண்ணினோமே' என்று புலம்பினார்கள். 'ஓய்வு பெற்று வாழப் போகிறார் என்று கருதினோமே; திரும்பி வந்து விட்டாரே' என்று கவலைப் பட்டார்கள். பதவியிலிருந்து ஓய்வு பெற்றாலும் பொது வாழ்விலிருந்து ஸி. ஆரால் ஓய்வு பெற முடியாது என்பதை இவர்கள் புரிந்து கொள்ளவில்லை. இலக்கியப் பணி அல்லது வேதாந்த சிந்தனை அவரது நேரத்தை முழுமையாக எடுத்துக் கொண்டு விட முடியாது. வேறு சிலர், அப்படியே நேருவை எதிர்ப்பதானாலும் அதை அவர் காங்கிரஸுக்கு உள்ளிருந்தபடியே செய்திருக்க வேண்டுமே தவிர, புதிய கட்சி ஆரம்பித்திருக்கக் கூடாது என்று கருதினர். ஆனால் ஸி.ஆரின் இந்த முடிவுக்கும் ஒரு பின்னணி இருந்தது:

1959ல் காங்கிரஸின் நிலக் கொள்கை தொடர்பாக மாற்றுக் கருத்துக் கொண்டிருந்த காங்கிரஸ்காரர்களைப் பார்த்து நேரு, "நீங்கள் எங்களுடன் ஒத்துப் போக வில்லை என்றால் கட்சியை விட்டு வெளியேறலாம்" என்று முகத்தில் அடிப்பது போல் பேசியிருந்தார். அதன் விளைவாகத் தான் என். ஜி. ரங்கா, சரண்சிங் போன்றவர்கள் வெளியேறியிருந்தனர். வேறு பலர், நேருவை எதிர்க்கத் துணியாமல், வாய் மூடி மௌனம் சாதித்தனர். ஸி. ஆரிடம் இதே பாணியில் நேரு நடந்து கொண்டிருக்க மாட்டார் என்று நம்பலாம் என்றாலும், காங்கிரஸுக்குள்ளிருந்தபடியே நேருவை ஸி.ஆர். எதிர்ப்பது என்பது எந்த அளவுக்கு யதார்த்தமானது என்பதை யோசிக்க வேண்டியிருந்தது. நேருவுடன் கருத்து மாறுபட்ட யாரையும் ஆதரிக்கக் காங்கிரஸில் யாருக்கும் துணிவு இல்லை! அவ்வாறிருக்க, ஸி. ஆர். அடுத்தடுத்துப் பல தோல்விகளையே சந்திக்க நேர்ந்திருக்கும். இந்தத் தோல்விகளையெல்லாம் வெற்றிக்கான படிகளாகக் கருதி, இறுதி வெற்றிக்காக நீண்ட காலம் காத்திருக்கிற பொறுமை ஸி. ஆருக்கு இல்லை. அவருடைய சுய கௌரவம் அதற்கு இடம் தரவும் இல்லை.

நேருவை ஸி. ஆர். எதிர்ப்பது என்பது பலருக்குத் தேசத்துரோகமாகவே தென்பட்டது. ஸி. ஆரின் பதவி ஆசையும், அந்த ஆசை நிறைவேறாததால் ஏற்பட்ட ஏமாற்றமும் அவரை இயக்குகின்றன என்று கூடச் சொன்னார்கள். சுயராஜ்யாவில் ஸி. ஆர். இந்தக் குற்றச்சாட்டுக்களுக்குப் பதிலளித்தார்.

"ஜவாஹர்லால் நேரு மீது தாக்குதல் நடத்துவதைத் தாங்கிக் கொள்ளவே முடியாமல் அதனைத் தடுக்கப் பலர் முன்வருவது எனக்கு மிகுந்த திருப்தியை அளிக்கிறது" என்று ஸி. ஆர். தமது பதிலை ஆரம்பித்தார். "இப்படித்தான் இருக்க வேண்டும். இதுதான் இந்தியாவுக்கும் அதன் எதிர்காலத்துக்கும் நல்லது. அன்பு, விசுவாசம் இவற்றைக் காட்டிலும் மக்களைப் பிணைக்கிற விஷயம் வேறு கிடையாது. மேலும் இம்மாதிரி அன்பு செலுத்தப்படவும் விசுவாசம் காட்டப்படவும் கடவுள் அருளால் நமக்கு ஒரு நல்ல மனிதர் கிடைத்திருப்பதும் நமது பாக்கியம்தான்.

"ஆனால் அதே நேரத்தில் நாம் இன்னொன்றையும் கவனிக்க வேண்டும். ஒரு பெரிய, தேசத்தை ஆள்கின்ற நிலையில் உள்ளவருக்கு, சுதந்திரமான, அச்சமற்ற ஆலோசனையை விட முக்கியமானது வேறு, ஒன்றும் கிடையாது. காந்திஜியும் பட்டேலும் உயிருடன் இருந்தால் அந்த அறிவுரையை வழங்கும் கடமை என்னைச் சார்ந்திராது. ஆனால் அவர்கள் காலமாகி விட்டார்கள்; நான்தான் உயிருடன் இருக்கிறேன். இப்போது நான் அமைதியான, சுலபமான வாழ்க்கைக்கு ஆசைப்பட்டு, என் மனத்தில் உள்ளதைப் பேசாமல் மறைப்பேனேயானால், காந்திஜியும் பட்டேலும் என் மீது வைத்த நம்பிக்கைக்கும் அன்புக்கும் துரோகம் செய்தவனாவேன்."

'பதவிக்கு ஆசைப்படுகிறார்; ஆசை நிறைவேறாததால் தாக்குதலில் இறங்குகிறார்' என்று பழி சுமத்தியவர்களுக்கு ஸி.ஆர். பின்வருமாறு பதிலளித்தார்:

"எனக்கு எந்தப் பதவியிலும் ஆசை இல்லை என்பது கடவுளுக்குத் தெரியும். இந்தியாவில் அடையக் கூடிய மிகப் பெரிய பதவிகளை நான் வகித்து விட்டேன். போதும் என்ற முடிவுக்கும் வந்து விட்டேன். பதவி ஆசை பலிக்கவில்லை என்பதாலோ, கோபத்தினாலோதான் நான் எதிர்ப்புப் பணியாற்றுவதாகக் கூறுவது முட்டாள்தனம்."

சீக்கிரமே, சுதந்திரக் கட்சியை நேருவும் பலமாக எதிர்க்க ஆரம்பித்தார்.

(தொடரும்)

**ஆர். எஸ். எஸ். இயக்கம் கண்டவர் டாக்டர் ஹெட்கேவார். அவருடைய நூற்றாண்டு விழா கொண்டாடப்பட்டு வரும் ஆண்டு இது...**

# கட்சிப் பற்றினை வென்ற தேசபக்தி


ஹெட்கேவார்

மகாராஷ்டிரத்திலுள்ள ஃபைஜ்பூர் என்ற ஊரில் ஐம்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன் ஒரு காங்கிரஸ் மாநாடு நடந்தது. கொடியேற்று நிகழ்ச்சியில் கொடிக்கம்பத்தின் பாதியிலேயே கொடி நின்று விட்டது. கயிறு சிக்கிக் கொண்டது. எண்பது அடி உயரமுள்ள அந்தக் கொடிக் கம்பத்தின் மீது ஏறிக் கயிற்றைச் சரி செய்ய யாருக்கும் துணிவு வரவில்லை. அப்பொழுது கூட்டத்திலிருந்த ஓர் இளைஞர் பாய்ந்து முன்னே சென்று சரசரவென்று கொடிக் கம்பத்தின் உச்சி வரை ஏறிச் சென்று, கயிற்றைச் சரி செய்தார். கொடி உயர்ந்து பறந்தது. அனைவரும் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். பண்டித ஜவாஹர்லால் நேரு உட்பட எல்லாத் தலைவர்களும் அந்த இளைஞரை வெகுவாகப் பாராட்டினார்கள். அவருக்குப் பரிசளிப்பது என்று தீர்மானமாயிற்று. ஆனால் இதற்கிடையில், அந்த இளைஞர் ஆர். எஸ். எஸ்ஸைச் சேர்ந்தவர் என்ற செய்தி பரவியது. அவ்வளவுதான், நேருஜியின் உற்சாகம் முடங்கிவிட்டது. அந்த இளைஞரைக் கௌரவிக்கும் திட்டமும் கைவிடப் பட்டது!

டாக்டர் ஹெட்கேவாருக்கு இந்த விஷயங்கள் தெரிய வந்தன. கிஸன்ஸிங் பர்தேஸி என்ற அந்த இளைஞரைச் சந்திக்க அவர் ஊரான துலியா சென்றார். பாராட்டு விழா ஏற்பாடு செய்து ஒரு வெள்ளிக்கோப்பை பரிசளித்தார். அந்தச் சமயத்தில் அவர், காங்கிரஸும் தேசத்திற்காகத்தான் தொண்டாற்றிக் கொண்டிருக்கிறது என்ற உணர்வுடன் கூறினார்: ''தேசத்திற்கான எந்த ஒரு காரியமாவது தடங்கலில் சிக்கிவிட்டது என்று நாம் அறிந்தால், அதை விடுவிக்க முடியும் என்ற நம்பிக்கை நமக்கு ஏற்பட்டால், கட்சி முதலியவற்றைப் பார்த்துக் கொண்டு இருக்காமல் முன்சென்று அந்தப் பிரச்னையைத் தீர்க்க வேண்டும்.

நாட்டுக்காகவே வாழ்வது என்று டாக்டர்ஜி உறுதி பூண்டிருந்தார். தமக்கென வீடு வாசல் என எதுவும் தேவையில்லை என்று தீர்மானித்திருந்தார். இருந்த போதிலும் டாக்டர் படிப்பு படித்துத் தேறினார். 'தொழில் நடத்தப் போவதில்லை, குடும்பம் நடத்தப் போவதில்லை என்றால் டாக்டர் பட்டம் பெற அவர் ஏன் இவ்வளவு சிரமப்பட வேண்டும்?' இந்தக் கேள்வியை அவரிடம் சிலர் கேட்ட போது கூறினார்: ''பட்டதாரி என்றால் சமுதாயத்தில் ஒரு மதிப்பு உள்ளது. மிகச் சிறந்த முறையில் மருத்துவத் தேர்வில் வெற்றி பெற்றுக் கைநிறையச் சம்பாதிக்கும் திறன் கொண்ட ஒருவர் செய்கிற தியாகத்திற்கு விசேஷ மதிப்பு அளிக்கப்படுகிறது. இப்படிப்பட்டவர்களைப் பார்த்து யாரும், 'வேறு வேலை எதுவும் இல்லை என்பதால் பொதுக் காரியத்தில் ஈடுபடுகிறான்' என்று கேலியாகப் பேச இடம் இராது.''

நாகபுரியில் டாக்டர் ஹெட்கேவாருடைய அறையின் கதவு, ஸ்வயம்சேவகர்களுக்காக எப்போதும் திறந்தே இருக்கும். டாக்டர்ஜி உட்கார்ந்திருப்பார். அவரைச் சுற்றி இளைஞர்கள் மொய்த்துக் கொண்டிருப்பார்கள். டாக்டர்ஜி தமது பொது வாழ்வு அனுபவங்களைச் சுவைபட எடுத்துரைப்பார். குபீர் குபீரெனச் சிரிப்பு அலைகள் எழுந்த வண்ணம் இருக்கும். இடையிடையே சில கேள்விகளும் தொடுப்பார். இப்படிப்பட்ட கூட்டங்கள் மூலமாகத்தான் பல பண்புகளை அவர் இளைஞர்களின் மனத்தில் வளர்த்து வந்தார். எது முறையானது, எது முறையற்றது என்பது பற்றிய அளவு கோல்களையெல்லாம் ஸ்வயம் சேவகர்களுடன் விவாதித்துப் புரிய வைப்பது அவர் வழக்கம்.

**ஹிந்து மறுமலர்ச்சியின் சிற்பி டாக்டர் ஹெட்கேவார். விலை ரூ. 5/-. வெளியிடுவோர்: 'டாக்டர் ஹெட்கேவார் நூற்றாண்டு விழாக் குழு, 1, எம். வி. நாயுடு தெரு, பஞ்சவடி, சேத்துப்பட்டு, சென்னை — 600 031.**

தொகுப்பு: யெஸ்பால்

# குங்குமம்




முதலிய கதைகளைத்
தொடர்ந்து

# சபலம்

எண்டமூரி
வீரேந்திரநாத்

எழுதும்

புதிய தொடர்கதை

3–3–89

இதழில் ஆரம்பம்



• இன்றே உங்கள் பிரதிக்கு
சொல்லி வையுங்கள்

# சிக்கன மாநாடு

செம்பியன்



**மா**ண்புமிகு மங்கள்தாஸ் பாண்டே ரொம்பக் கவலையோடு காரை விட்டு இறங்கி அமைச்சகத்தில் தமது அறைக்குள் நுழைந்தார். குளுகுளு அறையிலும் அவருக்கு வியர்த்துக் கொட்டியது. பி. ஏ. எட்டிப் பார்த்ததும், "நீ ஏன்யா வந்து நிக்கிறே, டிபார்ட்மெண்ட்டல் செகரட்டரியை வரச் சொல்லு" என்று எரிந்து விழுந்தார். கைக்குட்டையால் முகத்தை ஒற்றிக் கொள்வதற்கு முன் பி. ஏ. தலைமறைந்து கோபால் மிச்ரா எதிரே தெரிந்தார்.

"என்ன ஸார், காபினெட் மீட்டிங்கெல்லாம் நல்லபடியா முடிந்ததா?" என்று மிச்ராவின் குரலைக் கேட்ட பிறகுதான் மந்திரிக்குக் கொஞ்சம் தெம்பு வந்தது.

"மிச்ரா! நாம ஒரு பெரிய இக்கட்டிலே மாட்டிக்கிட்டு இருக்கோம்; இன்னிக்கு மந்திரிசபைக் கூட்டத்தில் நிதி அமைச்சர், 'உற்பத்திக்கு உதவாத செலவினங்களை அரசு கட்டுப்படுத்தினாத்தான் நாடு உருப்படும்'னு சொல்லிட்டார். பிரதமரும் தலையாட்டிட்டார். அதுமட்டுமில்லே, எல்லா அமைச்சகங்களிலும் இதுபற்றித் தீவிர ஆலோசனை நடத்தணும்னு சொல்லிட்டார்..."

"இவ்வளவுதானே, மிஸ்டர் பாண்டே! இதற்கு ஏன் இப்படிப் பதற்றம் அடையறீங்க? அடுத்த காபினெட் மீட்டிங்குக்கு முன்னால் ஃபைல் தயார் பண்ணித் தந்துடறேன். நிதி அமைச்சர் முன்னால், பிரதமர் காதுலே விழ்ற மாதிரி 'தப்'ன்னு போடுங்க!"



இதைக் கேட்ட உடனே அமைச்சருக்குத் தெம்பு வந்துவிட்டது. "மிச்ரா! ஏன் டயத்தை வேஸ்ட் பண்றீங்க? மளமளன்னு காரியம் ஆகட்டும்; அண்டர் செகரட்டரிகள், ஜாயிண்ட் செக்ரட்டரிகள், செக்ஷன் செக்ரட்டரிகள், வெறும் செக்ரட்டரிகள், செக்ரட்டரிகளின் செக்ரட்டரிகள் எல்லாரையும் அழைத்து ஒரு கூட்டம் போட்டு, யோசனைகளைக் கேளுங்க. ரிபோர்ட் தயார் பண்ணுங்க. ஒரே வாரத்திலே ஃபைல் என் மேஜைக்கு வரணும்!" என்று உத்தரவு போட்டார்.

புன்னகையுடன் வெளியேறினார் மிச்ரா.

**ஹோ**ட்டல் அசோகாவின் மாநாட்டு அறையில் காரியதரிசிகள் கூடியிருந்தனர். கூட்டத்தின் நோக்கத்தை மிச்ரா எடுத்துரைத்து விட்டு, "யோசனைகளை வரவேற்கிறேன்" என்றார்.

"டின்னர் எப்போ?" என்று கேட்டார் ஓர் அண்டர் செக்ரட்டரி.

"நமது ஆலோசனைகள் நடந்து முடிந்த பிறகுதான். கொஞ்சம் லேட் ஆனாலும் ஆறிப் போகாமல் கணப்பில் வைக்கச் சொல்லியிருக்கேன்."

"டிரிங்க்ஸ் உண்டா?" என்று ஒரு செக்ஷன் செக்ரட்டரி கேட்டார்.

"'உண்டு என்று சொன்னால்தான் ஐடியாக்கள் வரும் என்றால் உண்டு'" என்றார் மிச்ரா.

ரகுவீர் சிங் எழுந்து நின்று, "நமது அமைச்சகத்தில் ஆட்படை ரொம்ப அதிகம். நாற்பது வருஷங்களில் அடுத்தடுத்து வந்த மந்திரிகள் தங்களுக்கு வேண்டியவர்களுக்கு உத்தியோகம் தருவதற்காகப் புதிய நியமனங்கள் செய்ய, இப்படி ஆகிவிட்டது. தனியார் நிறுவனத்தில் பத்துப் பேர் வேலையை ஒரு கம்ப்யூட்டர் செய்துவிடும் என்றால் இங்கே இருபத்தைந்து பேர் வேலையைச் செய்துவிடும்..."

"நிறுத்து!" என்றார் ஒரு ஜாயிண்ட் செக்ரட்டரி. "இங்கே நாம் 'சிக்கனத்தைக் கடைப்பிடிப்பது எப்படி?' என்று ஆலோசிக்கக் கூடியிருக்கோமே தவிர, 'வேலையில்லாத் திண்டாட்டத்தை அதிகரிக்கச் செய்வது எப்படி?' என்பது பற்றிப் பேச வரவில்லை..."

"ஹியர்! ஹியர்!" என்று சில குரல்கள்



எழ, அமர்நாத் எழுந்து நின்று, ''என்னிடம் உள்ள ஒரு புள்ளி விவரப்படி நமது அமைச்சகத்தில், மொத்தம் ஆயிரத்து ஐந்நூற்று முப்பத்தேழரை ஏர்கண்டிஷனர்கள் உள்ளன'' என்றார்.

''அது என்ன, அரை ஏர் கண்டிஷனர்?''

''ஓடாத ஒன்றை அரை என்று கணக்கில் சேர்த்துக் கொண்டேன்.''

''சரி, மேலே...?''

''இதையெல்லாம் விற்றுவிட்டால் ஏகப்பட்ட மின்சாரம் மிச்சமாகும். எலெக்ட்ரிஸிடி பில் குறையும். மின்சாரத்தை, விவசாயம், தொழில், என்று அத்தியாவசியப் பணிக்குத் திருப்பி விடலாம். பவர்கட் இராது...''

''இதென்ன அசட்டுத்தனம்?'' என்று சீறினார் ஒரு காரியதரிசி. ''இல்லி வெயிலில் என்னால் வேக முடியாது. குளிர் காலத்தில் ஹீட்டர் இல்லாமல் நடுங்க முடியாது. இன்று ஏர்கண்டிஷனர் என்பது வாழ்க்கைக்கு இன்றியமையாத ஒரு சாதனம் ஆகி விட்டது, கலர் டீ. வி. போல. கலர் டீ.வி. இல்லையெனில் நாம் பிரதமரின் இமேஜைப் பார்த்துப் பார்த்து மகிழ்வது எப்படிச் சாத்தியமாகும்?''

மிச்ரா பயந்து போய், ''வேறு யோசனை சொல்லுங்கள்'' என்று பரபரத்தார்.

கே. என். சாமி என்று அனைவராலும் அழைக்கப்பட்ட நாராயணசாமி தமது வயதுக்கு மதிப்பளிக்கப்பட வேண்டும் என்பது போல் உட்கார்ந்தபடியே பேசினார்: ''கார்கள்! ஜீப்கள்! நமது மினிஸ்ட்ரியைச் சேர்ந்த எத்தனை கார்களும் ஜீப்களும் நாடெங்கிலும் அவரவர்களின் சொந்தக் காரியங்களுக்காக ஓடிக் கொண்டிருக்கின்றன தெரியுமா? அவற்றையெல்லாம் ஏலம் போட்டு விட்டால் வருவாய் கிடைக்கும்; பெட்ரோல் செலவும் மிச்சமாகும்.''

''ஓய்! சுவாமி! நீர் அடுத்த வருஷம் ரிடையர் ஆகப் போகிறீர்! இப்படித்தான் பேசுவீர்!'' என்றார் சாரி. ''அப்படியென்ன சொந்தக் காரியங்களுக்கு அதிகாரிகள் பயன்படுத்துகிறார்கள்? வாரம் ஒரு தடவை பிக்னிக் போகலாம்; வருஷத்துக்கு ஒரு தடவை குடும்பத்தோடு ஊர் போகலாம்; அவ்வளவுதானே? நாம் என்ன அரசு விமானத்தை எடுத்துக் கொண்டு தேர்தல் பிரசாரத்துக்கா போகிறோம்?''

மிச்ரா பயந்து போனார். ''பிரதமரையும் அரசியலையும் நமது விவாதங்களில் இழுக்க வேண்டாம்... வேறு ஏதாவது...?''

சங்கர்லால் எழுந்து நின்று, ''நமது அமைச்சகத்துடன் தொடர்புடையதாகப் பல தொழிலகங்களை நடத்துகிறோம். அத்தனையும் நஷ்டத்தில் நடக்கின்றன. அவற்றையெல்லாம் தனியார் துறையில் தள்ளி விட்டுவிட்டால், நமக்கு நஷ்டமிராது என்பது மட்டுமல்ல; தொழில்கள் லாபகரமாகவும் நடந்து, நாட்டின் பொருளாதாரம் பலப்படும். ஆனால் ஆளும்கட்சியின் சோஷலிசக் கொள்கை இதற்கு இடம் தராது என்பீர்கள் இல்லையா?'' என்று முடித்தார்.

''யோசனையையும் சொல்லி, அதற்கு எதிர்ப்பையும் நீயே தெரிவித்து விட்டாயாக்கும்! பேஷ்!'' என்றார் சுவாமி.

ஒரு மணி நேரம் ஆலோசனை நடத்திய பிறகு டிரிங்க்ஸ் பார்ட்டி, டின்னர் பார்ட்டி எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு அவரவரும் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

இரண்டு நாட்கள் கழித்து அமைச்சர் பாண்டேயைச் சந்தித்துப் பெருமிதத்துடன் ஒரு ஃபைலைத் தந்தார் மிச்ரா. அமைச்சர் ஃபைலைப் புரட்டினார். அடுத்த கணம்,

''என்னய்யா இது, எலிகளை ஒழிப்பதற்காக அவ்வப்போது மருந்து வைக்க என் மச்சானுக்கு வருஷத்துக்கு லட்ச ரூபாய்க்குக் காண்ட்ராக்ட் தந்திருக்கிறேன்; அதன் தலையிலே கைவைச்சுட்டீங்களே!'' என்று அலறினார்.

''வேறு வழியில்லை ஸார், தேச நலனுக்காக நீங்க இந்தத் தியாகம் பண்ணி வழிகாட்டணும். நீங்கள் தன்னலமில்லாதவர் என்று தெரிய வந்தால், பிரதமர் எவ்வளவு சந்தோஷப்படுவார், யோசியுங்க'' என்றார் மிச்ரா.

''அதுசரி, எலிகள் பெருகி ஃபைல்களையெல்லாம் கடிச்சுக் குதறுமே, அதைப் பற்றி யோசித்தீர்களா?''

''யோசித்தோம், ஸார்! எலிகள் கடிக்காத போதிலும் மலையாகக் குவிந்து கிடக்கும் ஃபைல்களை யாரும் பார்ப்பது கிடையாது. அதனால் எலி கடித்தால் பாதகம் இல்லை என்ற முடிவுக்கு வந்தோம்!''

''அடப்பாவிங்களா!'' என்று தமக்குள் முணுமுணுத்துக் கொண்ட அமைச்சர் பாண்டே, அடுத்த ஃபைலைப் புரட்டினார். ஷாக் அடித்தது போல் நிமிர்ந்து நின்று, ''என்னய்யா இது? முப்பத்தையாயிரத்து நானூற்றுச் சொச்ச ரூபாய்க்கு பில்?'' என்று கேட்டார்.

''அசோகா ஹோட்டல் கான்ஃபரன்ஸ் ஹால் வாடகை; டின்னர் வகையறாவில் செலவு முப்பதாயிரம். பாக்கி ஐயாயிரத்து சொச்சம்,கூட்டத்துக்குவந்திருந்தவர்களுக்கு ஞாபகார்த்தப் பரிசாக ஆளுக்கொரு ஃப்ரீப் கேஸ் அளித்ததற்கு ஆன செலவு. உங்களுக்காகவும் ஒன்று எடுத்து வைத்திருக்கிறேன்'' என்றார் மிச்ரா.

''அதை, பாவம், என் மச்சானுக்கு அனுப்பி வையுங்க. கொஞ்சத்துக்குக் கொஞ்சம் ஆறுதல் அடையட்டும்'' என்றார் அமைச்சர்.

''ஆகட்டும் ஸார், செலவை ஸாங்ஷன் செய்து கையெழுத்துப் போடுங்க'' என்று பேனாவை எடுத்து அமைச்சரிடம் நீட்டினார் மிச்ரா.



# பரிசு: கலர் டீவி!

டீவி நிகழ்ச்சி அல்லது டீவி தொடர் ஒன்றின் விமர்சனம்;

டீவி வாங்கும் போது, நிறுவும் போது, பார்க்கும் போது அல்லது பழுது பார்க்கும் போது ஏற்பட்ட அனுபவம்;

டீவி விளம்பரங்கள் தொடர்பான நிகழ்ச்சி அல்லது உரையாடல்;

வீடியோ அனுபவம் அல்லது வீடியோ கேம் அனுபவம் —

என்று டீவி — வீடியோ தொடர்புடைய எந்த அம்சத்தை வேணுமானாலும் நீங்கள் ஆகஸ்டு இறுதி வரை தொடர்ந்து எழுதி வரலாம்.

**பிரசுரமானால் பரிசு ரூ. 25. தவிர பிரசுரமாகும் ஒவ்வொரு துணுக்கு அல்லது விமர்சனத்துக்கும் வரிசை எண் தரப்பட்டு ஆறு மாதங்களுக்குப் பின் குலுக்கல் முறையில் ஒரு எண் தேர்ந்தெடுக்கப்படும். அவருக்குக் கலர் டீவி பரிசு!**

உங்கள் வீட்டில் டீவி இல்லையா? அக்கம் பக்கத்தில் நடந்தவற்றை, நண்பர் வீட்டில் டீவி பார்த்த அனுபவத்தை எழுதலாமே? டீவி பரிசு பெறலாமே!

உங்கள் வீட்டில் டீவி இருக்கிறதா, புதிய கலர் டீவி பரிசு பெற்றுப் பழைய டீவியை விற்றுக் காசாக்கலாமே!

**முக்கிய நிபந்தனைகள்:**

* **நீங்கள் எழுதுவது அடக்க முடியாமல் சிரிப்பை வரவழைக்க வேண்டும்!**
* **விமர்சனம் எனில் கல்கியில் அரைப் பக்கத்துக்குள்ளும் துணுக்கு எனில் பத்துப் பதினைந்து வரிகளுக்குள்ளும் அடங்க வேண்டும்!**
* **எந்தத் தேதியில் எழுதுகிறீர்களோ அதற்கு மிகவும் சமீபத்திய கல்கி இதழின் தலையங்கப் பக்கத்தில் உள்ள தேதிப் பகுதியை மட்டும் — மூன்று வரிகள் — நீங்கள் எழுதும் தாளின் மேல்புறம் பார்வையாக ஒட்டி அனுப்ப வேண்டும்.**
* **உறை மீது ''டீவி — வீடியோ பக்கங்கள்'' என்று குறிப்பிடவும்.**
* **பிரசுரத்துக்கு ஏற்கப்படாதவற்றைத் திருப்பி அனுப்ப இயலாது.**





• சந்திரிகா



• எட்டு வயதில்...



• பதினாலு வயதில்...

**எ**ட்டு வயதில் ஒரு குழந்தை காணாமல் போய் விடுகிறது. ஆறு ஆண்டுகளுக்குப் பிறகு இன்னும் தேடல் தொடர்கிறது எனில் இன்று அச் சிறுவன் அல்லது சிறுமிக்கு வயது பதினாலு ஆகியிருக்கும். எட்டு வயதுக் குழந்தையின் புகைப்படத்தை வைத்துக் கொண்டே இன்றைக்கும் தேடிக் கொண்டிருக்க முடியுமா என்ன? இந்தப் பிரச்னை தீர அமெரிக்க விஞ்ஞானிகள் இருவர், சிறுவர் சிறுமியர் வயது ஏற ஏற எப்படி வளர்கின்றனர் என்பதை மிக நுணுக்கமாக ஆராய்ந்து, அந்த ஆய்வின் முடிவுகளை கம்ப்யூட்டரில் 'புரோகிராம்' செய்து விட்டனர். பலன்: ஆறு வயதுக் குழந்தையின் படத்தை அணு அணுவாக ஆராயும் கம்ப்யூட்டர், அக் குழந்தையின் பதினாலு வயது தோற்றத்தைப் படம் போட்டுத் தந்து விடுகிறது! இப்படியே எந்த வயதுக் குழந்தையும் சில பல ஆண்டுகளுக்குப் பின் எப்படி தோற்றமளிக்கும் என்பதை இந்தக் கம்ப்யூட்டர் படம் பிடித்துத் தந்து விடுகிறது. எனவே, காணாமல் போகாத குழந்தைகளின் பெற்றோர்களும் தங்கள் குழந்தைகள் எதிர்காலத்தில் எப்படி இருக்கும் என்று தெரிந்து கொள்ள ஏகப்பட்ட பணம் செலவழிக்கிறார்கள். பத்திரிகைகளோ இன்றைய சினிமா நட்சத்திரங்கள் அறுபது, எழுபது வயதில் எப்படி இருப்பார்கள் என்று அறியத் துடிக்கின்றன. பணம் அள்ளித் தரத் தயாராயிருக்கின்றன! (நியூஸ் வீக்.)

# முன்னாள் மந்திரிக்குக் காதல் கடிதங்கள்!

**இ**ருபத்தோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிரிக்கெட் ஆட வரும் பாட்ஸ்மென்கள் வேகப் பந்து வீச்சுக்கு பயப்படவே மாட்டார்கள். இவர்கள் அணியக் கூடிய அதி ஃபேஷனான கவசம், லாஸர் ஒளிக் கதிரை அனுப்பக் கூடிய ஓர் அமைப்பை உள்ளடக்கியிருக்கும். பந்து ஒரு குறிப்பிட்ட வேகத்துக்கு அதிகமாக வந்து, ஒரு குறிப்பிட்ட எல்லையையும் கடந்து, இனி பாட்ஸ்மனால் அதனைத் தடுக்கவோ அடிக்கவோ முடியாது என்ற நிலையில், பந்து பாட்ஸ்மனைத் தாக்கு முன்னர் லாஸர் ஒளிக் கதிர் அதனைத் தாக்கி அழித்துவிடும். பந்து சாம்பலாக உதிர்ந்து விடும்!

**ரா**ஜீவ் காந்தியின் சமீபத்திய விசிட்டின் போது, வழக்கம் போல, பாதுகாப்பு கருதி பிரதான சாலைகளில் வாகனப் போக்குவரத்து தடை செய்யப்பட்டது. இதில் பாதிக்கப்பட்ட பெண்மணி 35 வயது ரத்தினாபாய். இவருக்கு என்ன ஆயிற்று? நிறைமாத கர்ப்பிணியான ரத்தினாபாய்க்கு பிரசவ வலி எடுக்க அவரை டாக்ஸியில் பம்பாயின் 'சியான்' பகுதியில் உள்ள ஒரு நர்சிங் ஹோமிற்கு அழைத்துக் கொண்டு போனார்கள். ஆனால், ராஜீவ் காந்தி விஜயத்தையொட்டி போக்குவரத்து தடை காரணமாய், நர்சிங் ஹோமுக்குப் பத்துப் பதினைந்து கஜ தூரத்தில் அவர்களது டாக்ஸி நிறுத்தப்பட்டது. போலீஸ் அதிகாரிகளிடம், விவரமாய் எடுத்துக் கூறியும் பயனில்லை. வேறு வழியில்லாமல், உறவுக்காரர் நர்சிங் ஹோமுக்குப் போய், டாக்டரை அழைத்து வந்தார். ஆனால் அதற்கு முன் டாக்ஸியிலேயே குழந்தை பிறந்து விட்டது.

**ப**ம்பாயின் முன்னாள் கல்வி அமைச்சர் சந்திரிகா கென்னியா. இவர் மீது ஒரு தலைக் காதல் கொண்ட இளைஞன் பிரேம் ராஜ்; பதினைந்து நாட்களில் சுமார் நூறு தடவை சந்திரிகாவிற்கு டெலிபோன் செய்தானாம். இது பலனளிக்காமல் போகவே, இந்த ரோமியோ நேரிலேயே காதல் கடிதங்களுடன் வர ஆரம்பித்து விட்டான்! இந்தத் தொல்லையிலிருந்து மீள சந்திரிகா, போலீஸில் புகார் கொடுத்து விட்டார்: இனி போலீஸாயிற்று; பிரேம் ராஜ் ஆயிற்று!

— ஜாலி; ஜெயந்தி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 31543, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# இடமோ இடம்:
## இதுவே அதன் அகம்

**பரந்த இடவசதி தரும்
சிறந்த வடிவமைப்பு**

பொருள்கள் வைக்க தாராளமான இடம்—இதுவே புதிய கோத்ரெஜ் 165 லிட்டர் ரெஃப்ரிஜிரேட்டரின் அகம். மிக விசாலமான காய்கறி ட்ரே அதிக இடவசதி கொண்டது. மேம்பட்ட வடிவமைப்பு காரணமாக டோர் பேனலிலே 10 பெரிய பாட்டில்கள் வைக்குமளவு இடவசதி கொண்ட 'பாட்டில் ரேக்'. 15 முட்டைகள் அடுக்குமளவு இடமுள்ள 'எக்ரேக்'. மாற்றியமைத்துக் கொள்ளக்கூடிய ஷெல்ஃபுகளிலே, பெரிய பாத்திரங்களை வைக்கத் தோதாக விரிந்த இடவசதி. எல்லாமே தனிச்சிறந்த கோத்ரெஜ் மகத்துவம்.

எல்லாம் புதிய கோத்ரெஜ் கம்ப்ரெஸர் பாலியூரேத்தன் இன்சுலேஷன் இரண்டுமே இணைந்து தரும் விரைவில் குளிர்விக்கும் திறன்; மின் செலவிலும் சேமிப்பு. கோத்ரெஜ் சிறப்பாகத் தரும் நிற வரிசைகள் நீங்கள் தேர்ந்தெடுக்க: டெஸர்ட் ஸாண்ட், ஸ்பிரிங் கிரீன், கூல் புளூ, எலெக்ட்ரிக் ரெட் மற்றும் ஸன்ஷைன் எல்லோ க்ளாஸிக் ஒயிட்டு கூட.

Godrej
165 லிட்டர் ரெஃப்ரிஜெரேட்டர்

## இதற்கு இணையேது!

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka